# பொருளடக்கம்

# உலகம் போற்றும் உத்தம நபி (ஸல்)

வெளியீடு :
திரீயெம் பப்ளிஷர்ஸ்



பொருளடக்கம்

# உலகம் போற்றும் உத்தம நபி (ஸல்)




ஆசிரியர் :

ஸையித் இப்ராஹீம், எம்.ஏ., எல்.டி





வெளியீடு :

திரீயெம் பப்ளிஷர்ஸ்,

83, அங்கப்ப நாயக்கன் தெரு,

சென்னை-600 001

# முன்னுரை

இன்று 'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்' என்ற முழக்கம் உலகெங்கும் முழங்குகின்றது. 'ஒரே உலகு' வேட்கை உயர்ந்து நிற்கின்றது. மனித குலத்தைப் புனிதப் படுத்தும் இனிய இக்கொள்கைகளை ஒருவர் வேண்டி நின்றார்; வாழ்வில் கண்டார். விரும்பிக் கொண்டாடுகிறது இவ்வுலகு அவரை; உத்தமராகப் போற்றுகிறது.

இஸ்லாம் என்பது எல்லோரும் எளிதில் போற்றற்குரிய இனிய அறநெறியாகும். இவ்வுலகு தோன்றியது முதல் மெய்நெறி அறியாது, உய்யும்வகை தெரியாது, அழிவுப் பாதையில் சென்று கொண்டிருந்த மக்களை நல்வழியில் அழைத்துச் செல்ல பல நாடுகளில் பல்வேறுபட்ட காலங்களில் பல பெரியார்கள் தோன்றியுள்ளார்கள். சிறந்த சீர்திருத்தங்களைச் செய்துள்ளார்கள் என்று இஸ்லாம் எடுத்துக் கூறுகிறது. உலகம் ஒப்புகிறது. அந்த வரிசையிலே வந்து செயற்கரிய செய்த சீர்திருத்தச் செம்மலே நபிகள் நாயகம்.

உலக நலனுக்காக உழைத்த பெரியார்களில் ஒரு சிலர் சமயத் தலைவராகத் திகழ்ந்துள்ளனர்; பேரரசர்களாகத் திகழ்ந்துள்ளனர்; சமூக சீர்திருத்தவாதிகளாகத் திகழ்ந்துள்ளனர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் ஒப்பற்ற தொண்டாற்றியுள்ளனர். ஆனால், முஹம்மத் நபி மட்டும் சிறந்த சமயத்தலைவராக, சிறந்த சிந்தனையாளராக, அரசியல் தலைவராக, பொருளியல் வல்லவராக, சமூக சீர்திருத்த செம்மலாக விளங்கி, வியத்தகு தொண்டு செய்துள்ளனர். ஆகையினால்தான் அவர்களை வியந்து பாராட்டுகிறது உலகம்.

விடுதலை அடைந்துள்ள நம் இந்தியக் குடியரசில் எல்லோரும் இந்நாட்டு மன்னராவர். இளைஞர்களே குடியரசு இந்தியாவின் செல்வர்கள். எதிர்கால இந்தியாவின் ஏற்றத்தைத் தோற்றுவிக்க இருக்கும் இளைஞர்களின் உள்ளம் வளமடைய உலகம் போற்றும் உத்தம நபியின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு தெரிந்து கொள்ளல் வேண்டுமென்பது எனது ஆவல். எனது ஆவலின் விளைவே இச்சிறு நூல், ஆசிரியப் பெருமக்களும் பிற அன்பர்களும் ஆதரவும் தருவார்களென நம்புகிறேன்.

உத்தமபாளையம், கவ்தியா கல்லூரி முதல்வர் ஜனாப் கா. அப்துல் கபூர் சாஹிப், M.A., அவர்களின் "நாயகமே" என்னும் நூலிலிருந்து சில கவிதைகளைச் சேர்த்துள்ளேன். அனுமதி தந்த அவர்களுக்கு எனது நன்றி உரியதாகும்.

திருச்சிராப்பள்ளி
15—11—57
(22' ரபியுஸ்ஸானி 1377)

**ஸையித் இப்ராஹீம்.**

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

புகழ் அனைத்தும் இறைவனுக்கே உரியது. ஸலவாத்தும் ஸலாமும் இறைதூதர்மீதும் அன்னாரது கிளையார் தோழர்கள்மீதும் உண்டாவதாக!

# உலகம் போற்றும் உத்தம நபி (ஸல்)

—0—

## 1. வாழ்க்கை வரலாறு

மறுவிலா தெழுந்த முழுமதிபோல
முஹம்மது நபிபிறந்தனரே.

ஃ ஃ ஃ

மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முஹம்மது நபிபிறந் தனரே. —சீறா

முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அரபு நாட்டிலே மக்கா நகரில் பிறந்தனர். இந்தியாவுக்கு மேற்கில் அரபிக் கடலும், அதற்கு மேற்கில் அரபு நாடும் இருக்கின்றன. அரபு நாடு முழுவதும் பாலைவனமுள்ள நாடு; அதிக வெப்பமுள்ள நாடு. அங்கு ஆறுகளும், செழிப்பான நிலங்களும் கிடையா. எங்கும் கற்பாறைகளும், குன்றுகளும் மணல் வெளிகளுமே காணப்படும்.

அரபு நாட்டின் வடக்கில் ஈரானும், ஈரான் வளைகுடாவும் கிழக்கில் அரபிக் கடலும், மேற்கில் செங்கடலும், மத்தியத் தரைக் கடலும், தெற்கில் இந்து மகா சமுத்திரமும் உள்ளன. அரபியத் தீபகற்பத்தைச் சிலர் தீவு என்றும் சொல்வர்.

அரபியாவின் மேற்குப் பகுதியில் செங்கடலோரத்திலுள்ள பாகம் ஹிஜாஸ் (Hijaz) எனப்படும். இங்கு மக்கா, மதீனா என்ற புனித நகரங்கள் உள்ளன. தாயிப் (Tayif) என்பது இங்குள்ள மூன்றாம் முக்கிய நகரம்.

# பொருளடக்கம்

## மக்கநகர் நாயகமே!

சுத்தபர வெட்டவெளி தோன்றுபொரு ளத்தனைக்கு
மொத்தமுதற் காரணமா மோங்குமியல் தாங்கியுறு
வித்தரிய மக்கநகர் வீற்றிருந்து மாற்றமற
இத்தரையிற் பெற்றபுக ழேத்தற் கெளிதேயோ
இன்பநபி நாயகமே ஏத்தற் கெளிதேயோ!

ஆதியொரு வன்றெழுகை ஐவேளை நோன்புடைமை
போதியநல் லேழைவரி புக்கமக்க ஹஜ்ஜைந்தும்
நீதிதரு சன்மார்க்க நீர்மையவென் றோதிமுதன்
மாதிரியாய் முன்னின்ற வள்ளன்மை யுள்ளேமோ!
மன்னர்நபி நாயகமே வள்ளன்மை யுள்ளேமோ!

வாய்ந்ததிரு கஃபாவில் வல்லவனை யுன்னிமன
மோய்ந்ததொழு கைச்சமயத் தொட்டகத்தி னூன்குடரோ
டேய்ந்ததசை கொண்டெறிந்த வீணனுக்கு மின்னருட்சீ
ராய்ந்தளித்துக் காத்தவுங்கள் அன்புடைமை நன்றேயோ
ஆலநபி நாயகமே அன்புடைமை நன்றேயோ!

வாய்ந்தபெரு நாள்வரிசை வாங்கிநல்லத் தந்தையின்றி
யோய்ந்தழுத வேழைமகற் குள்ளுடைந்து நீராட்டி
தோய்ந்தநறும் பட்டுடுத்தித் தூங்கியிரு தோட்டுணைகொண்
டேய்ந்ததிரு பள்ளிபுக்க வின்னருளு மென்னேயோ
இன்பநபி நாயகமே இன்னருளு மென்னேயோ!

மக்களிடைத் தாழ்வுயர்வு வன்மைமென்மை தீண்டாமை
மிக்ககுல பேதமுதல் வேற்றுமையெ லாமொறுத்துத்
தக்கசம தத்துவமாந் தண்ணிழற்கீ ழாக்கியென்றுந்
தொக்கவருள் கூர்ந்துவந்த துய்யநிலை பொய்யேயோ
சோதிநபி நாயகமே! துய்யநிலை பொய்யேயோ!

*மகாமதி, சதாவதானி* கா. ப. செய்குத் தம்பிப் பாவலர்

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

புகழ் அனைத்தும் இறைவனுக்கே உரியது. ஸலவாத்தும் ஸலாமும் இறைதூதர்மீதும் அன்னாரது கிளையார் தோழர்கள்மீதும் உண்டாவதாக!

# உலகம் போற்றும் உத்தம நபி (ஸல்)

—0—

## 1. வாழ்க்கை வரலாறு

மறுவிலா தெழுந்த முழுமதிபோல
முஹம்மது நபிபிறந்தனரே.

ஃ ஃ ஃ

மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முஹம்மது நபிபிறந் தனரே. —சீரு

முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அரபு நாட்டிலே மக்கா நகரில் பிறந்தனர். இந்தியாவுக்கு மேற்கில் அரபிக் கடலும், அதற்கு மேற்கில் அரபு நாடும் இருக்கின்றன. அரபு நாடு முழுவதும் பாலைவனமுள்ள நாடு; அதிக வெப்பமுள்ள நாடு. அங்கு ஆறுகளும், செழிப்பான நிலங்களும் கிடையா. எங்கும் கற்பாறைகளும், குன்றுகளும் மணல் வெளிகளுமே காணப்படும்.

அரபு நாட்டின் வடக்கில் ஈரானும், ஈரான் வளைகுடாவும் கிழக்கில் அரபிக் கடலும், மேற்கில் செங்கடலும், மத்தியத் தரைக் கடலும், தெற்கில் இந்து மகா சமுத்திரமும் உள்ளன. அரபியத் தீபகற்பத்தைச் சிலர் தீவு என்றும் சொல்வர்.

அரபியாவின் மேற்குப் பகுதியில் செங்கடலோரத்திலுள்ள பாகம் ஹிஜாஸ் (Hijaz) எனப்படும். இங்கு மக்கா, மதீனா என்ற புனித நகரங்கள் உள்ளன. தாயிப் (Tayif) என்பது இங்குள்ள மூன்றும் முக்கிய நகரம்.

அரபிக் கடலோரத்தில் உள்ள பாகங்களுக்கு எமன் ஹத்ரமவ்த், உம்மான் என்று பெயர்.

அரபிய மக்கள் : இந்த நாட்டில் மத்திய அரசாங்கம் இல்லாதிருந்தது. மக்கள் பல கோத்திரங்களாகப் பிரிந்து ஒற்றுமை இழந்து வசித்தார்கள். கல்வியும், ஒழுக்கமும் இல்லாதவர்கள். அவர்களிடம் பஞ்சமா பாதகங்களும் அனுச்சாரங்களும் நிறைந்திருந்தன. கற்சிலைகளையும், நட்சத்திரங்களையும் வணங்கினார்கள். மக்காவிலுள்ள காபா (Kaba) என்னும் வணக்கஸ்தலத்திலே முந்நூற்று அறுபது கற்சிலைகளை வைத்து உருவ வணக்கஞ் செய்தார்கள். அந்த நாட்டு மக்கள் ஆண்டு தோறும் மக்காவுக்குத் தலயாத்திரைக்காக வருவார்கள்.

மக்காவில் குரைஷ் கோத்திரத்தில் நபிநாயகம் பிறந்தனர். இந்த குரேஷ் கோத்திரம் மக்காவிலும் அரபு நாட்டிலும் உயர்ந்த நிலையில் இருந்தது. ஆண்டு தோறும் தலயாத்திரைக்காக அரபியாவின் பல பாகங்களிலிருந்து மக்காவுக்கு யாத்ரீகர்கள் வருவார்கள். அவர்களிடமிருந்து கிடைக்கும் பணத்தைப் பெற்று குரைஷ் கோத்திரத்தார் வாழ்க்கை நடத்தினார்கள். காபாவில் இருந்த விக்ரகங்களை அரபியர் வணங்கியதால் குரைஷ் கோத்திரத்தாருக்குப்பெருஞ் செல்வமும் சிறப்பும் பெருமையும் கிடைத்தன. குரைஷ் கோத்திரத்தார் சென்ற வழியிலே அக்கால அரபியர் செல்வது வழக்கம்.

பெருமானாரின் தகப்பனார் பெயர் அப்துல்லாஹ். பிறக்கு முன்னரே தந்தையை இழந்தனர். தாயார் பெயர் ஆமினா. ஆறும் வயதில் தாயாரும் இறந்து விட்டார். பெற்றோரை இழந்த அனாதைக் குழந்தையைப் பாட்டனார் அப்துல் முத்தலிப் (Abdul Muttalib) வளர்த்தார். ஒன்பதாம் வயதில் பாட்டனாரும் காலஞ் சென்றார். பிறகு, பெரிய தந்தை அபூதாலிப்(Abu Talib) அந்தக் குழந்தையை வளர்த்தார்.

ஆடு மேய்த்தல் : அபூ தாலிப் சீமானல்லர். அவரிடம் ஆடுகள் இருந்தன. அந்த ஆடுகளைப் பெருமானார் மேய்த்து வருவார். எத்தனையோ நபிமார்கள் இவ்வாறு செய்திருக்கிறார்கள். சிறுவயதிலிருந்தே பெருமானார் அமைதியான குணமும், இனியபேச்சும் உடையோர். மக்கள் துன்பப் படுவதைக் கண்டால் சகிக்கமாட்டார். நண்பர்கள் எல்லாரும் அவரை உள்ளன்புடன் நேசித்தார்கள்.

சங்கம் : விதவைகள், அனாதைகள், உதவியற்ற அன்னியர்கள் முதலியோரைப் பாதுகாக்க மக்கா நகரில் ஒரு சங்கம் இருந்தது. அதில் பெருமானார் சேர்ந்து பணியாற்றினார்.

நம்பிக்கைக்கு உரியவர்—''அல் அமீன்'' : தமது குழந்தைகளைவிட அதிகமாக அபூதாலிப் பெருமானாரை நேசித்தார். வயது பன்னிரண்டு ஆயிற்று. அப்பொழுது சிரியா நாட்டுக்குச் செல்லும் வியாபாரக் கூட்டத்துடன் பெருமானாரையும் அபூதாலிப் அழைத்துக் கொண்டு போனார். ஸிரியா நாட்டிலே, புஸ்ரா (Busra) என்னும் நகரிலே ஒரு கிறிஸ்தவப் பாதிரி, பெருமானாரைக் கண்டு, ''இவர் வருங்கால நபி!'' என்று கூறினார்.

பிறகு, பெருமானார் வியாபார சம்பந்தமாக வேறு இடங்களுக்கும் சென்றார். வியாபாரக் காரியங்களில் மதுரமாகப் பேசுவார். நெஞ்சிலே வஞ்சனை கிடையாது கடுகளவும் கடுஞ்சொல் கிடையாது, கடமை செய்வதில் தவறமாட்டார். இத்தகைய தூய வாழ்வையும், உண்மை பேசும் உயர்வையும், நெறிதவறாத அன்பையும், வளமிக்க உள்ளத்தையும் கண்ட மக்கள் பெருமானாரை ''அல் அமீன்'' -நம்பிக்கையாளர் என்றும், ''அஸ்ஸாதிக்'' -உண்மையாளர் என்றும் அழைத்தார்கள்.

பெருமானார் ஒருபோதும் விக்ரகத்திற்குமுன் தலை சாய்த்ததே கிடையாது. மதுவை தொடவே இல்லை. சூதாட்டங்களிலும், சண்டை சச்சரவுகளிலும் அவருக்கு அணுவளவும் ஆசையில்லை.

நீதிவழங்கல் : மக்காவிலே காபா என்னும் ஒரு புனித வழிபடுமிடம் இருந்தது. அதன் சுவர்கள் இடிந்தமையால் அப்பொழுது மறுபடியும் கட்டப்பட்டன. சுவரின் மூலையில் ஹஜ்ருல் அஸ்வத் என்னும் அருள் கருங்கல் நாட்டுவதில் மக்காவில் பல கோத்திரத் தலைவர்கள் தமக்கே அந்த உரிமை கிடைக்கவேண்டுமென்று விரும்பினார்கள். அதனால் போர் உண்டாகி விடுமென்று தெரிந்தது. இறுதியாக, மறுநாள் காலையில் காபாவில் முதலாவதாக நுழையும் மனிதர்செய்யும் தீர்ப்பின் பிரகாரம் நடக்க வேண்டுமென்று அந்தத் தலைவர்கள் முடிவு செய்தார்கள்.

மறுநாள் அதிகாலையிலே எல்லோரும் எதிர் பார்த்துக் கொண்டு நின்றார்கள்! ஒரு திருஉருவம் தோன்றியது! ''வருகிறார்! வருகிறார்! அதோ வருகிறார்! அல் அமீன் வருகிறார்!'' என்று எல்லோரும் ஆரவாரம் செய்தார்கள். பெருமானாரும் இதற்கிடையில் அங்கு வந்தனர். வந்த அமீனிடம் கருங்கல் சம்பந்தமான வழக்கில் தீர்ப்புச் செய்யும்படி அங்குள்ளோர் வேண்டிக் கொண்டார்கள். உடனே பெருமானார் ஒரு விரிப்பை விரித்தனர். அந்தக் கல்லை விரிப்பின் நடுவில் வைத்தனர். எல்லாத் தலைவர்களும் அந்த விரிப்பின் ஓரங்களைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு வருமாறு சொன்னார். எல்லோராலும் எடுத்து வரப்பட்ட கருங்கல் அந்தச் சுவரில் வைக்கப்பட்டது. எல்லாத்தலைவர்களும் திருப்தியடைந்தார்கள். எதிர்பார்த்திருந்த பெரும் போர் தவிர்க்கப்பட்டது.

திருமணம் : மக்காவிலிருந்த குரைஷ் கோத்திரத்தார் வியாபாரத்தில் சிறப்புடன் விளங்கினார்கள். வடக்கே ஸிரியா, தெற்கே எமன் வரையும் சென்று வியாபாரஞ் செய்வார்கள். பெருமானாரும் அந்தத் துறையில் நுழைந்து உண்மையுடன் வியாபாரஞ்செய்தனர். எவருடனும் சச்சரவு செய்யமாட்டார். ஒப்பந்தத்திற்கு விரோதமாக நடக்கமாட்டார், எல்லோரும் பெருமானார்மீது அளவுகடந்த நம்பிக்கை வைத்து, அன்னாரிடம்தங்கள் பணத்தை அடைக்கலமாகவிட்டுச் செல்வார்கள்.

இவ்வாறிருக்குங்கால் பெருமானாரின் நல்லொழுக்கத்தையும், நேர்மையான வியாபார முறையையும், உறுதியான உள்ளத்தூய்மையையும், குரைஷ் கோத்திரத்தில் சீமாட்டியாயிருந்த கதீஜா நாயகி கேள்விப்பட்டார். பெருமானாரைத் தமது வியாபாரத்தில் சேர்த்துக்கொண்டார். எனவே, பெருமானார் ஸிரியா நாட்டிற்குச் சென்று வியாபாரஞ் செய்தனர். அதில் நல்ல இலாபம் கிடைத்தது.

பெருமானார் வியாபாரத்திலிருந்து திரும்பி வந்த பிறகு களங்கமற்ற உள்ளத்தையும், கலக்கமற்ற செயல் திறனையும், பழுதற்ற ஒழுக்கத்தையும் கேட்டு அந்தக் கதீஜா நாயகியே பெருமானாரை மணந்துகொள்ள விரும்பினார். பெருமானாரும், சம்மதித்துத் திருமணம் செய்துகொண்டனர். பெண் என்றால் மண் என்று இழித்துப் பழித்து வந்த நாட்டிலே இருவரும் ஒருமனப்பட்டு இறைவனை அஞ்சி, தூய வாழ்க்கை நடத்தினார்கள்.

அருள் உள்ளம் : இத்தகைய போற்றற்குரிய தூய வாழ்க்கை நடத்திய பெருமானார் மக்களிடமிருந்து ஒதுங்கித் தனிமையை நாடுவார். ஏன்? மக்கள் பாவச் செயல்களில் ஈடுபட்டிருந்தார்கள், அதைக் கண்டு மனம் நொந்தார். அவர்களை உய்விக்கும் கவலையில் பெருமானாரின் காலம் கழிந்தது.

இவ்வாறாகப் பெருமானுக்கு நாற்பதாம் ஆண்டு தொடங்கியது. மக்கா நகரின் அருகிலே ஹிரா என்னும் குகை ஒன்று உண்டு. பள்ளிக்குப் போய் அறியாத எழுதப் படிக்கத் தெரியாத இவர் அங்குச் சென்று சிறிதளவு உணவுடன் பல நாள் தனிமையாய் இருந்து, இறைவனை நினைத்துத் தியானம் செய்வார். மக்களுக்கு அறவொளி அளிக்கவேண்டுமென்று அழுது, தொழுது ஆண்டவனிடம் மன்றாடுவார். ஏன்?

ஒரே இறைவனது வழிபாட்டிற்காக மக்கா நகரிலே காபா என்ற வழிபடுமிடத்தை இப்ராஹீம் நபி

கட்டினர். ஆனல், வெகு காலத்திற்குப் பிறகு அரபு நாட்டு மக்கள் இறைவனை மறந்து உருவ வணக்கத்தில் ஈடுபட்டார்கள். காபாவிலே முந்நூற்றறுபது விக்ர கங்கள் இருந்தன. அந்தக் கற்சிலைகளைத்தெய்வமென்று நம்பி, மக்கள் வழிபாடு செய்தார்கள். மக்கள் மது வுண்டு மதிமயங்கி இருந்தார்கள். கொலையைக் கலையாக எண்ணினர். சூதை வாழ்க்கையின் சுகமாகக் கொண்டார்கள். குடும்ப விளக்குகளான மனைவியரை மறந்தார்கள். மங்கையர் திலகங்களை மனம் போன போக்கில் நடத்தினர்கள். அடிமை வியாபாரஞ் செய்தார்கள். சகல உலகங்களையும் படைத்துப் பாது காக்கும் ஒரே இறைவனை மறந்தார்கள். மண்ணும், கல்லும், மரமும் பறவையும் தெய்வங்களாகக் கருதப் பட்டன. அஞ்சாமல் செய்யப்பட்ட பஞ்சமா பாதங் களுக்கு இந்த உலகம் உறைவிடமாகி விட்டதெனத் தோன்றியது இதை நினைத்து நினைத்துப் பெருமானர் மனம் நொந்தார்.

செம்புகல்லு மண்முதலாம் சேர்ந்தபல சாதனத்தில்
வம்புபெறச் செய்துதச்சன் வைத்தவுரு வத்தனையும்
அம்புவியில் தெய்வமென ஆக்கிமகிழ்ந் திருப்போர்கள்
வெம்புநர காள்வாரே.

என்று உள்ளம் கலங்குவார்.

நபித்துவத் துவக்கம் : பெருமானருக்கு நாற்பது வயதாகி விட்டது. இந்த வயதிலே மனிதன் தனது குறைகளை நீக்கி நேர்வழி பெறுகிருன். மானிட வாழ்க்கையிலே ஒரு மாற்றம் ஏற்படுகிறது. ஆன்ம உலகின் பாதை திறக்கிறது. இதைக் கைவிடாமல் ஆன்ம வழி நடப்போர் ஆசீர்வதிக்கப்பட்டவராவர்.

மக்காவிலிருந்து மூன்று மைல் தொலைவிலே ஹிரா என்ற ஒரு குகை உண்டு, அதிலே பெருமானர் பல காலமாகத் தியானஞ் செய்துகொண்டிருந்தார். அவ் வாறு இருக்குங்கால், ரமலான் மாதத்திலே ஓர் இரவிலே, ஒரு தேவதூதர்—மலக்—(angel) தோன்றி னர். பெருமானரை நோக்கி அந்த வானவர்,

"இக்ர—! ஓதுவீராக!" என்று மூன்று தடவை கூறினார், "எனக்கு ஓதத் தெரியாது!" என்றார் பெருமானார்.

அவ்வாறு வந்த வானவர் பெயர் ஜிப்ரீல். அவர் ஆண்டவனிடமிருந்து பெருமானாருக்குத் தூதுகொண்டு வந்தார். ஆதம் நபி (Adam) காலமுதல் எல்லா நபிமார்களுக்கும் உபதேசிக்கப் பெற்ற இஸ்லாம் மார்க்கமே அந்தத் தூது.

இஸ்லாம் என்றால், ஒரே ஆண்டவனுக்குத் தலை சாய்த்தல் என்று பொருள். இஸ்லாம் மார்க்கம் சாந்தி மார்க்கமாகும். உலக மக்கள் அனைவரும் உயர்வுபெற அருளப்பட்ட பொதுவான மார்க்கம். இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றுவோர் அனைவரும் முஸ்லிம்கள். சுவர்க்கத்திற்கு தாருஸ்ஸலாம்—சாந்தி வீடு—என்று பெயர். ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்கு ஸலாம்—சாந்தி—சொல்லுகிறார். சகல உலகங்களுக்கும் கருணையாக அனுப்பப்பட்ட தூதரே முஹம்மது நபி என்று குர்ஆன் வேதம் கூறுகிறது.

நபிநாயகத்திற்கு நபித்துவம் வந்தவுடன், இறைவன் ஒருவனையே வணங்கவேண்டும் என்று மக்களுக்கு உபதேசம் செய்தார். ஆண்டவன் ஒருவனே; உலக மக்களெல்லாம் சகோதரர்களே என்ற உண்மையைப் போதித்து, உலகினுக்கு உற்ற வழிகாட்டியாக அமைந்தார்.

நபிநாயகத்தின் தூதை முதலில் நம்பினோரெல்லாம் பெருமானாருடன் நெருங்கிப் பழகியவர்களே. அவர்கள் உடனே இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக்கொண்டு முஸ்லிம் ஆனார்கள். பெருமானாரின் மனைவி கதீஜா நாயகியே முதலாவது முஸ்லிம் ஆனார். குடும்ப வாழ்க்கையிலே கணவனுடைய குறைகளை நன்கு அறியக் கூடியவர் யார்? மனைவிதானே? நபிநாயகம் தமது தூதை அறிவித்த பொழுது அவரது மனைவி கதீஜா நாயகி அதை ஒப்புக்கொண்டார். மேலும், நபிநாயகத்

தைப் புகழ்ந்து, அன்னாரது குணச்சிறப்புகளை ஒவ்வொன்ருகக் கூறி, ஆண்டவன் நபிநாயகத்திற்கு உதவிசெய்வான் என்றும் உறுதிகூறினுர். பெருமானுரின் மேலான ஒழுக்கத்திற்கு கதீஜா பிராட்டியார் நிரந்தரமான சான்ருக விளங்குகிருர்.

பிறகு, நபிபெருமானுரின் தோழர் அபூ பக்ர் என்பவர் முஸ்லிமானுர். இவர், துவக்கத்திலிருந்து இறுதி வரை உண்மையான தோழராகவும் துணைவராகவும் விளங்கினுர். சிறுவரில் அபூ தாலிப் உடைய புத்திரர் அலீ என்பவர் இஸ்லாத்தில் சேர்ந்தார். பெருமானுரின் பணிமகனுயிருந்த ஜைத் பின் ஹாரிஸா என்பவர், இரவும் பகலும் பெருமானுருடன் இருந்து வாழ்க்கை நடத்தினர்; அவரும் முஸ்லிமானுர்.

அதற்குப் பிறகு, நபிநாயகமும் ஹஸ்ரத் அபூ பக்ரும் இஸ்லாமியப் பிரச்சாரஞ் செய்தார்கள். ஹஸ்ரத் அபூ பக்ர் முயற்சியால் ஹஸ்ரத் உஸ்மான் பின் அப்பான் (Affan), ஹஸ்ரத் ஜுபைர் (Zubair), ஹஸ்ரத் அப்துர் ரஹ்மான் பின் அவ்ப், (Abdu Rahman bin Auf) ஹஸ்ரத் ஸஅத் பின் அபீவக்காஸ், ஹஸ்ரத் தல்ஹா என்ற ஐந்து முக்கியஸ்தர்கள் முஸ்லிமானுர்கள்.

அதற்குப்பின், ஹஸ்ரத் பிலால் (Bilal), ஹஸ்ரத் அம்மார் பின் யாஸிர், ஹஸ்ரத் கப்பாப் (Khabbab) பின் அர்த், ஹஸ்ரத் ஸுஹய்ப் (Suhaib) போன்ற அடிமைகள் முஸ்லிமானுர்கள்.

இனி குரைஷ் கோத்திரத்தில் ஹஸ்ரத் அர்கம் (Arqam), ஸயீத் பின் ஜைத், அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் உஸ்மான் பின் மக்ஊன், உபைதா போன்ற பல வாலிபர்கள் இஸ்லாம் மதத்தைப் பின்பற்றினுர்கள்.

இந்தப் புதிய முஸ்லிம்கள் மறைவிடங்களுக்குச் சென்று இறை வணக்கம் புரிவார்கள், பெருமானுர், ஆரம்ப காலத்திலே அர்கம் என்ற தோழரது இல்லத்திலே இருந்து போதனை செய்தார். இவ்வாறு மூன்று ஆண்டுகள் கழிந்தன.

பிறகு மக்காவாசிகளை அழைத்து, ஸபா (Safa) என்ற குன்றின்மீது அமர்ந்து, வெளிப்படையாக இஸ்லாமியப் பிரச்சாரத்தை ஆரம்பித்தார்.

ஆனால், வெகு காலமாகப் பல தெய்வ வணக்கத்தில் ஈடுபட்டிருந்த மக்கள் இந்தப் புரட்சிகரமான சொற்களைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். சிலர் இந்தத் தூதை ஒப்புக் கொண்டார்கள்; பலர் எதிர்த்தார்கள்; நகைத்தார்கள்; பகைத்தார்கள்; பலாத்கார முறைகளைக் கையாண்டார்கள், மந்திரவாதி! பைத்தியக்காரன்! பித்தன்! குலத்தைக் கெடுக்கும் கோடரி! என்றெல்லாம் கூறினார்கள்.

பெருமானாருக்கு எதிரிகளால் அளவு கடந்த துன்பங்கள் உண்டாயின. அவர் செல்லும் பாதையில் முட்களைப் பரப்பினார்கள். பெருமானாரது இல்லத்தின்மீது கல்லெறிந்தார்கள். அன்னார் மீது குப்பைகளைக் கொட்டினார்கள். கல்மாரி பெய்வித்தார்கள். ஒரு நாள் தரைமீது தலையை வைத்துப் பெருமானார் தொழுது கொண்டிருக்கையில் ஒட்டகத்தின் அழுகிய குடல்களையும் சாணத்தையும் அன்னார் பிடரியின்மீது அபூஜஹல் என்பவர் வைத்தார். இன்னொரு நாள் பெருமானார் தொழுதுகொண்டு நிற்கையில் உக்பா பின் அபீ முஆத் (Ukba bin Abi Muad) என்பவர் பெருமானாரின் கழுத்தை ஒரு துணியால் முறுக்கி மூச்சுத் திணறும்படி செய்தார். உடனே, பெருமானார் முகங்குப்புற விழுந்துவிட்டனர். அச்சமயம், ஹஸ்ரத் அபூ பக்ர் அந்த வழியாக அங்கு வந்து கொண்டிருந்தார். அவர் ஓடிவந்து பெருமானாருக்கு உதவிசெய்து, ''ஆண்டவன் ஒருவனே என்று சொல்வதற்காக நீங்கள் ஒரு மனிதரைக் கொல்ல விரும்புகிறீர்களா?'' என்று கூறித் தடுத்தார்.

ஏழை முஸ்லிம்களையும் அடிமைகளையும் அந்த எதிரிகள் இரக்கமில்லாமல் அடிப்பார்கள், சித்திரவதை செய்வார்கள். இந்த விந்தை மனிதரான பெருமானாரின் செயலை அப்பகைவர் வேற்றுமையாகவே நினைத்தார்கள்.

**தாயை தந்தையைத் தன்னுயி ராகிய**
**சேயைப் பெண்டிரைச் சிந்தையில் வேறதாய்ப்**
**பாயத் தோடும் பகைப்பிக்க வல்லதோர்**
**மாயக் காரன் முஹம்மத்** என்றார்கள்.

இத்தகைய துன்பங்களைப் பெருமானாரும் முஸ்லிம்களும் ஐந்தாண்டுகள் சகித்தார்கள்.

பின்னர் பகைவர்கள் பெருமானாரிடம்வந்தார்கள். "முஹம்மதே! உமக்கு என்னவேண்டும்? செல்வம் வேண்டுமா? உம்மைச் சீமானாக்கிவிடுவோம், தலைமை வேண்டுமா? நாங்கள் உம்மை எங்கள் தலைவராக ஏற்றுக் கொள்ளுகிறோம், மன்னராகப் பிரியமா? அப்படியானால், நாங்கள் உம்மை எங்கள் அரசராக ஏற்றுக் கொள்ளுகிறோம் பெண் வேண்டுமா? அவ்வாறானால், நல்ல அழகான பெண்ணைத் திருமணஞ் செய்துகொடுக்கிறோம்" என்றார்கள். இவ்வாறு, மண்ணைக்காட்டி மணிமகுடம் காட்டி, பொன்னைக் காட்டி, பெண்ணைக் காட்டி பெருமானாரை மயக்க முயன்றார்கள்.

இதற்குப் பெருமானாரின் விடை என்ன? எனக்குப் பொன்னும் வேண்டாம்; பொருளும் வேண்டாம், பெருமையும் வேண்டாம், தலைமையும் தேவையில்லை. அரசியலிலும் ஆசையில்லை. மக்களெல்லாம் ஒரே ஆண்டவனை வழிபட வேண்டும் என்பதே எனது குறிக்கோள்" என்றனர்.

பெருமானார் சுயநலம் நினையாது. சிறந்த கொள்கையை உறுதியாகக் கொண்டமையைக் கவிஞர் அப்துல் கபூர்.

**"பெண்ணாசை பொன்னாசை பேரரசைப் பெற்றிடுமோர்**
**மண்ணாசை யாலசையா மாசில்லா நாயகமே!"**

என்று பாடிப் பரவசமடைகின்றார்.

"சீரிய கொள்கைக்காக ஜெகமே எதிர்த்துவரினும் சித்தம் தளரமாட்டேன்" என்று பெருமானார் வீர சபதம் பூண்டனர்.

பின்னர், எதிரிகள் அபூதாலிபிடம் சென்று முறையிட்டார்கள், அபூதாலிப் பெருமானுரை அழைத்தார். தமது சங்கட நிலைமையை விளக்கினர். அப்பொழுது பெருமானுர் அளித்த விடையானது சரித்திரப் புகழ் பெற்றுவிட்டது. அதாவது, பிதாவே! இந்த எதிரிகள் எனது வலக்கையில் சூரியனையும் இடக்கையில் சந்திரனையும் கொடுத்தாலும் நான் இந்த இஸ்லாமியப் பிரசாரத்தை நிறுத்தமாட்டேன். இதில் நான் உயிர் இழந்தாலும் சரியே!'' என்று உறுதியுடன் கூறினர்.

**செங்கதிரும் தண்மதியும் சேர்த்துகையில் தந்திடினும்**
**எங்கொள்கை விடமாட்டோம் என்றுரைத்த நாயகமே!**

அக்காலத்திலே குரைஷ் கோத்திரத்தில் தலைவர்களாக இருந்த ஹஸ்ரத் ஹம்ஜா (Hamza) ஹஸ்ரத் உமர் பின் கத்தாப் என்ற இருவரும் முஸ்லிமானுர்கள். ஹஜ்ரத் உமர் முஸ்லிமானது இஸ்லாமிய சரிதையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி, ஏனென்ருல், அவர் மிகவும் வீரமுள்ளவர். அச்சம் இல்லாதவர். ஆகையால், முஸ்லிம்களை வெளிப்படையாக அழைத்துக்கொண்டு போனுர், எல்லோரும் காபாவில் தொழ ஆரம்பித்தார்கள்.

நபி நாயகத்துடன் இருந்த தோழர்களுக்கு ஸஹாபா (Shahaba) என்றுபெயர். இந்த ஸஹாபாக்களின் எண்ணிக்கை தினந்தோறும் பெருகிக்கொண்டிருந்தது. அச்சமயம், அபூதர் கப்பாரீ (Abu Dar Ghaffari) என்ற அறிஞர் மக்காவுக்கு வந்து முஸ்லிமானுர்.

இதற்குப் பிறகு குரைஷ் கோத்திரத்தார் ஏழை முஸ்லிம்களைப் பிடித்துச் சித்திரவதை செய்தார்கள். அரபியப் பாலை வனத்திலே, நடுப்பகல் வெய்யிலிலே, சுடுமணலிலே முஸ்லிம் ஏழைகளையும் அடிமைகளையும் பிடித்துக் கைகால்களையும் கட்டித் தரையில் கிடத்துவார்கள். பளுவான கற்களை நெஞ்சில் வைப்பார்கள். சுடுமணலை உடலில் கொட்டுவார்கள். இரும்பைப் பழுக்கக் காய்ச்சி உடம்பில் சூடு போடுவார்கள்.

குறிப்பாக பிலால், ஸுஹைப் என்ற அடிமைகள் இத்தகைய துன்பங்களுக்கு ஆளானார்கள். அவர்களது கழுத்தில் கயிற்றைக் கட்டி பகைவர் தெருவில் இழுத்துச் செல்வார்கள். ஆனால், அந்த ஏழை முஸ்லிம்கள் உறுதியுடன் இறைவனை மறக்காமல் இருந்தார்கள், அஹத்!—இறைவன் ஒருவனே! அஹத்—இறைவன் ஒருவனே! என்ற வார்த்தையே அவர்களது உதட்டிலிருந்து வெளிவரும். கப்பாப் (Khabbab) என்பாரை நெருப்பில் தள்ளினார்கள். அவரது உடல வெந்துவிடும்படி செய்தார்கள். யாஸிர், அவர் மனைவி ஸுமையா, அவர் மகன் அம்மார் இம்மூவரும் மக்காவிலே மிகவும் ஏழையான முஸ்லிம்கள். யாஸிரைச் சித்திரவதை செய்து கொன்றே விட்டார்கள், ஸுமையாவை அபு ஜஹ்ஸ் என்பவர் ஈட்டியால் குத்திக் கொன்றார். அம்மார் என்பவரைச் சுடுமணலில் கிடத்தி அவர் உணர்வு இழக்கும் வரை அடித்தார்கள்.

இந்தத் துன்பங்களைச் சகித்துக்கொண்டுவந்த முஸ்லிம்களுக்கு நபிநாயகம் ஆறுதல் வார்த்தைகளுடன் பொறுமையை மேற்கொள்ளும்படி கூறுவர். "முற்காலத்து நபிமார்களும் அவர்களைப் பின்பற்றுவோரும் நம்மைவிட அதிகத் துன்பங்களை அனுபவித்தார்கள். பொறுமையைக் கடைப்பிடியுங்கள். உங்கள் பொறுமைக்குப் பலன் கிடைக்கும்" என்பார்கள்.

நாடு கடத்தல்: ஓரிடத்திலிருந்து துன்பத்தை விட்டு, மற்றோரிடத்திற்குச் சென்று குடியேறுவதை ஹிஜ்ரத் என்கிறோம். அரபியாவின் தென்மேற்கில் செங்கடலும், எதிர்க்கரையிலே ஆப்பிரிக்கா கண்டத்தின் அபிஸீனியா நாடும் இருக்கின்றன. மக்காவில் எதிரிகளால் துன்புறுத்தப்பட்ட முஸ்லிம்களை அபிஸீனியா நாட்டுக்கு நபிநாயகம் அனுப்பினர். அந்த நாட்டுக் கிறிஸ்தவ மன்னர் நஜ்ஜாஷி என்பவர் முஸ்லிம்களுக்குப் புகலிடம் கொடுத்தார். அதனால், மக்காவிலிருந்து குரைஷிகள் அபிஸீனியா சென்று

அங்கிருந்த முஸ்லிம்களைத் துரத்திவிட முயன்றார்கள். ஆனால், அந்த நாட்டு அரசர், முஸ்லிம்களைப் பாது காத்தார்.

ஸபா மலைமீது: துன்பப்பட்ட முஸ்லிம்களை வெளி நாட்டுக்கு அனுப்பிவிட்டுப் பெருமானார் மக்காவிலே இருந்தனர், ஒருநாள் பெருமானார், குரைஷி கோத் திரத்தாரை அழைத்துக்கொண்டுபோய், மக்கா நகருக்கு அருகிலுள்ள ஸபா (Safa) மலைமீது அமர்த்தி, அவர்களை நோக்கிப் பகிரங்கமாக இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தார்.

பெருமானார்: நான் எப்பொழுதாயினும் பொய் சொல்ல நீங்கள் கேட்டதுண்டா?

குரைஷ் கோத்திரத்தார்: இல்லை! இல்லை!

பெருமானார்: இந்த மலையின் பின்பக்கம், உங் களை எதிர்க்க ஒரு சேனை பதுங்கி இருக்கின்றது என்று நான் சொன்னால் நீங்கள் நம்புவீர்களா?

குரைஷ்: நிச்சயமாக நம்புவோம், ஏனென்றால், நீர் எப்பொழுதாவது பொய் சொல்ல நாங்கள் கேட்க வில்லை.

பெருமானார்: அப்படியானால் கேளுங்கள்! ஒரே இறைவனை வழிபடுங்கள்! விக்ரகவணக்கத்தை விட்டு விடுங்கள்! கெட்ட செயல்களை விட்டு விலகுங்கள்! நல்ல செயல்களைச் செய்யுங்கள்!

இந்தஉரையைக் கேட்டவுடன், அவர்கள் அனைவரும் கடுங்கோபம் கொண்டார்கள். கடுமையான சொற் களைப் பிரயோகித்தார்கள். இதற்காகவா எங்களை இங்கு அழைத்தீர்'' என்று சீற்றங்கொண்டார்கள். அன்று முதல் அபூஜஹல் என்னும் விரோதி பெருமானார் செல்லுமிடமெல்லாம் நிழல் போலத் தொடர்ந்து செல்வார். ''முஹம்மது சொல்வதைக் கேட்க வேண்டாம்!'' என்று மக்களுக்குச் சொல்வார்.

சமுதாய விலக்கு : ஒவ்வொரு முயற்சியிலும் பகைவர்க்குப் படுதோல்வியே கிடைத்தது. இஸ்லாத்தின் பேரொளி பரந்து விரிந்து கொண்டிருந்தது. பெருமானார் அரபிய மக்களுக்கு அறநெறியைக் காட்டி, இன்பத்தை ஊட்டி, சுவர்க்க மார்க்கத்தையும் காட்டினர். எதிரிகள் இன்னொரு முயற்சி செய்தார்கள். இறுதியாக, பெருமானாரையும் அன்னாரைச் சேர்ந்தோரையும் சமூக விலக்குச் செய்தார்கள். அஃதாவது, அவர்களுடன் எல்லாத் தொடர்புகளும் துண்டிக்கப்பட்டன. மக்காவின் பக்கத்திலுள்ள ஒரு கணவாயில் பெருமானாரும் முஸ்லிம்களும் இரண்டு ஆண்டுகள் துன்பப்பட்டார்கள். ஆகாரம் கிடைக்காமல் இலைகளையும் தோலையும் சாப்பிட்டார்கள். பின்னர், இந்த பகிஷ்காரம் அகற்றப்பட்டது, அப்பொழுது பெருமானாருக்கு வயது நாற்பத்தைந்து.

நெருக்கடியான இந்த நிலைமையிலே வெகுகாலம் பெருமானாருக்குத் துணைவராக இருந்த அபூதாலிப், கதீஜா நாயகி இவ்விருவரும் இறந்து விட்டார்கள். அதனால் பகைவருடைய எதிர்ப்பு இன்னும் அதிகரித்து விட்டது.

ஒரு நாள் மக்காவிலிருந்து நாற்பது மைல் தூரத்திலுள்ள தாயிப் (Taif) நகருக்குப் பெருமானார் சென்றனர். அங்கு இஸ்லாமியப் பிரச்சாரஞ் செய்தபொழுது மக்கள் கல்லால் எறிந்து துரத்தி விட்டார்கள். பாதங்களிலிருந்து இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் கருணைக் கடலாய் உலகிற்கு வந்த பெருமானார், தமக்குத் துன்பம் இழைத்தோருக்காக ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்தார்கள்.

**சொன்மாரி பொழிந்தற்காய்க் கன்மாரி பெய்துவிட்ட**
**வன்மனத்தார் திருந்துதற்கு வழிவகுத்த நாயகமே!**

யத்ரிப் (Yathrif) : மக்கா நகருக்கு வடக்கிலே முந்நூறு மைல் தொலைவிலே யத்ரிப் என்றொரு நகரம்

இருந்தது. அது பிறகு மதீனத்துந்நபி அல்லது மதீனு என்று பெயர் பெற்றது. அச்சமயம், மதீனு நகரிலே அவ்ஸ், கஸ்ரஜ் என்ற இரண்டு கோத்திரங்கள் இருந்தன. இவற்றிற்கிடையில் அடிக்கடி சச்சரவு ஏற்படுவதுண்டு. மக்காவாசிகள் வாணிகத்தில்சிறப்புடையோர். மதீனுவாசிகள் விவசாயிகள். அச்சமயம், மதீனுவிலும் அதன் சுற்றுபுறங்களிலும் அதிக செல்வம் படைத்த யூதர்கள் வசித்து வந்தார்கள். அவர்கள் இந்த இரண்டு கோத்திரத்தாருக்கும் கடன் கொடுத்து இவர்களைத் தங்கள் அடிமைகளைப்போல் நடத்தினுர்கள்.

நபித்துவ பத்தாம் ஆண்டிலே, இவ்விரண்டு கோத்திரங்களிலிருந்தும் பலர் மக்காவுக்கு தலயாத்திரை (ஹஜ்) செய்ய வந்தார்கள். அவ்வாறு வந்தோரிடம் நபி நாயகம் சென்று, இஸ்லாம் மார்க்கப் பிரச்சாரம் செய்தனர். அவர்களில் ஆறு மனிதர் உடனே முஸ்லிமானுர்கள். அடுத்த ஆண்டில் மக்காவுக்கு வந்தோரில் பன்னிரெண்டு பேர் முஸ்லிமானுர்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டு, மதீனு நகரிலிருப்போருக்கு இஸ்லாமிய உபதேசஞ் செய்ய முஸ்அப் பின் உமைர் (Mus-ab-bin-Umair) என்ற பெரியார் அனுப்பப்பட்டார். அவரது முயற்சியால் சுமார் ஓர் ஆண்டுக்குள் மதீனுவாசிகளில் பெரும்பாலோர் முஸ்லிம்களாகி விட்டார்கள்.

அதற்கடுத்த ஆண்டில் தலயாத்திரை செய்ய மக்காவுக்கு வந்த மதீனுவாசிகள் பெருமானுரை மதினுவுக்கு அழைத்துப் போக ஒப்புக்கொண்டார்கள். எனவே, மக்காவிலிருந்த முஸ்லிம்களைப் பெருமானுர் மதினுவுக்கு அனுப்ப ஆரம்பித்தனர்.

இறுதியாக நபித்துவம் வந்து பதின்மூன்ரும் ஆண்டிலே எல்லா முஸ்லிம்களும் மதீனு சென்றுவிட்டார்கள். அபிஸீனியா சென்றவர்களும் பின்னர் மதீனுவுக்கு வந்து சேர்ந்தார்கள். ஆனுல், மக்காவில் பெருமானுர், ஹஸ்ரத் அபூபக்ர், ஹஸ்ரத் அலி இம்மூவர் மட்டும் இருந்தார்கள்.

சதித்திட்டம்: இந்த நிலைமையை அறிந்த குரைஷ் தலைவர்கள் ஒன்றுகூடி, எல்லாத் தலைவர்களும் ஒரே காலத்தில் ஒரு குறிப்பிட்ட இரவில், பெருமானார் தூங்கிக்கொண்டிருக்கையில் வாட்களால் கொன்றுவிட வேண்டுமென்று திட்டம் தீட்டினார்கள். அவ்வாறே ஓர் இரவு பெருமானார் படுத்திருந்த வீட்டைச் சூழ்ந்து கொண்டு உருவிய வாள்களுடன் நின்றார்கள்.

ஹிஜ்ரத்-இடம் பெயருதல்: தானொன்று நினைக்கை யிலே தெய்வம் வேறொன்று நினைக்கும் என்பது பழமொழி. பகைவர்கள் முற்றுகை செய்திருந்தார்கள். ஆயினும், பெருமானாருக்கு ஆண்டவன் அருள் செய் தான். ஹஸ்ரத் அலீயைத் தமது படுக்கையில் படுக்க வைத்து விட்டுத் தமது தோழர் அபூ பக்ர் (Abu Bakr) என்பவரை தம்முடன் அழைத்துக் கொண்டு பகை வருக்குத் தெரியாமல் நபி நாயகம் புறப்பட்டனர். அங்கிருந்து மக்காவின் அருகிலிருந்த தவ்ர் என்னும் குகையிலேஇருவரும் மூன்றுநாள் மறைந்திருந்தார்கள்.

பகைவரோ எட்டுத் திக்கிலும் ஓடினார்கள். அங்கும் இங்கும் எங்கும் எம்பிரானைத் தேடினார்கள். முஹம்மதைப் பிடித்து வருவோருக்கு பெரும் பரிசு கொடுக்கப் படும் என்று விளம்பரஞ் செய்யப்பட்டது. தேடு வோரில் ஒரு கூட்டம் பெருமானார் இருந்த குகையின் பக்கம் வந்து கொண்டிருந்தது. இறைவன் அருளைப் பாருங்கள்! அச்சமயம் அந்தக் குகையின் நுழைவாயி லிலே சிலந்திப் பூச்சியொன்று வலை பின்னியிருந்தது! புறாக்கள் முட்டையிட்டிருந்தன. எனவே அந்தக் குகைக்குள் மனிதர் இருக்கமாட்டார்கள் என்று நினைத்து அவர்கள் திரும்பி விட்டார்கள்.

பகைவர்கள் குகைக்கு வருவதைப் பார்த்து ஹஸ்ரத் அபூ பக்ர் பயந்தார் அவர்கள் உள்ளே எட்டிப் பார்த்தால் என்ன விளைவு ஏற்படும்? ''நாம் இருவரும் இருக்கிறோம்!'' என்று பெருமானாரிடம் மனங்கலங்கிக் கூறினர் தோழர் அபூ பக்ர். ஆனல்

பெருமானார் வெகுநிம்மதியுடன், ''இல்லை! நாம் மூவர் இறைவனும் நம்முடன் இருக்கிறான்!'' என்று உறுதியுடன் கூறினார்.

இவ்வாறு குகையில் மூன்று நாட்கள் கழிந்தன. நான்காம் நாள் இருவரும் அங்கிருந்து புறப்பட்டு எட்டு நாள் பயணஞ் செய்து மதீனா வந்து சேர்ந்தார்கள். நபி நாயகம் இவ்வாறு மக்காவிலிருந்து மதீனா சென்ற நிகழ்ச்சியை இஸ்லாமிய வரலாற்றிலே ஹிஜ்ரத் என்கிறோம். அன்று முதல் முஸ்லிம்களுடைய ஹிஜ்ரி ஆண்டு துவங்குகிறது.

மஸ்ஜிதே நபவீ - நபி பள்ளிவாசல் : மதீனா மக்களில் அநேகர் முஸ்லிம்களாகி இருந்தார்கள். பெருமானார் அங்கு சென்றவுடன் இறைவன் வணக்கத்திற்காகப் பள்ளிவாசல் கட்டினார்கள். அதன் சுவர்கள் மண் சுவர்களே. ஈச்ச ஓலைகளால் கூரை வேயப்பட்டது. இதைக் கட்டும்பொழுது பெருமானாரும் கூலியாளைப் போல வேலை செய்தனர்.

இந்தப் பள்ளிவாசலிலே பெருமானார் மக்களுக்கு இஸ்லாமிய மார்க்கத்தைப் போதித்தனர். ''அல்லாஹ் ஒருவன்-அவன் மேலானவன்-இரக்கம் உள்ளவன்'' என்று இயம்புவார். பாவம் இல்லாத நேர்மையான வாழ்க்கையை மக்கள் நடத்த வேண்டும் என்றும், உலக மக்களெல்லாம் சகோதரர்கள் என்றும், குழந்தைகள், விதவைகள், பலவீனர்கள், அனாதைகள் முதலியோரிடம் அன்பாயிருக்க வேண்டுமென்றும் உபதேசிப்பார், பிராணிகளிடம் பிரியமாயிருங்கள் என்றும் போதிப்பார்.

''அன்ஸார்'' - ''முஹாஜிர்'' சகோதரத்துவம் : பெருமானாருக்கும் மக்காவிலிருந்து வந்தோருக்கும் மதீனாவாசிகள் உதவி செய்தார்கள். இந்த உதவியாளருக்கு அன்ஸார் என்று பெயர். அன்ஸார் என்ற சொல்லுக்கு உதவியாளர் என்றே பொருள். இதைப்

போலவே, மக்காவிலிருந்து மதீனா சென்று குடியேறிய முஸ்லிம்களுக்கு முஹாஜிர்-சொந்த ஊர் துறந்து குடி பெயர்ந்தோர் - என்று பெயர். அன்ஸார்களும் முஹாஜிர்களும் வாழ்ந்தார்கள் முஸ்லிம்கள் அனைவரும் பெருமானாரின் உண்மையான சகோதரர்கள் போன்று போதனைகளைப் பேணினார்கள். தொழுகையிலும் நோன்பிலும் ஈடுபட்டார்கள். ஆண்டவனுடைய நல்லடியார்களாக மாறினார்கள். ஆத்ம உயர்வு பெற்றார்கள்.

மதீனா குடியரசுத் தலைவர் : நபிநாயகம் மதீனா வந்தபிறகு அங்குள்ள முஸ்லிம்களுக்கும், யூதர்களுக்கும் தலைவராயினர். மதீனா குடியரசின் தலைவரான பிறகு, மதீனாவைச் சுற்றியிருந்த பல கோத்திரங்களுடன் பெருமானார் சமாதான உடன் படிக்கை செய்து கொண்டனர். இந்த உடன்படிக்கைகளில், கிறிஸ்தவர்களுக்கும், யூதர்களுக்கும், அக்கினி வணக்கத்தாருக்கும் அவரவர் மதத்தைப் பின்பற்றும் உரிமையைப் பெருமானார் அளித்தனர்.

இதற்கிடையில் அபிஸீனியாவிலிருந்த முஸ்லிம்களும் மதீனா வந்து சேர்ந்தார்கள்.

வீரராக விளங்குதல் : மக்கா நகரத்தாரும், அபூ ஜஹல் போன்ற அவர்களது தலைவர்களும், இஸ்லாமை அழிக்க எண்ணங்கொண்டார்கள். நாடு கடந்து முந்நூறு மைலுக்கப்பால் சென்ற முஸ்லிம்களை அங்கும் நிம்மதியுடன் இருக்கவிடவில்லை. முன்னர் மக்காவிலிருந்து அபிஸீனியா சென்ற முஸ்லிம்களைத் தங்களிடம் ஒப்பித்துவிடும்படி நஜ்ஜாஷி என்ற அபிஸீனிய அரசரை அந்தப் பகைவர்கள் கேட்டுக் கொண்டார்களல்லவா? இப்பொழுது மதீனாவில் அவர்களுக்கு ஒரு கையாள் கிடைத்தார். அவரே வேஷதாரிகளின் நய வஞ்சகர்களின் தலைவர்—அவர் பெயர் அப்துல்லாஹ் பின் உபை (Abdulla bin Ubai) அவர் முஸ்லிம் ஆனார். ஆனால், மறைமுகமாக முஸ்லிம்களை அழிக்கத்திட்ட

மிட்டார்: அவருடன் மக்காவாசிகள் தொடர்பு கொண்டார்கள். மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையில் வசித்த பல கோத்திரங்களையும் குரைஷிகள் தங்களுடன் சேர்த்துக்கொண்டார்கள்.

மக்காவிலிருந்து பலத்த சேனையுடன் முஸ்லிம்களை எதிர்க்க மக்காவாசிகள் மதீனாவுக்கு வந்தார்கள். பத்ர் (Badr) உஹத் (Uhad) அகழ் என்னுமிடங்களில் முஸ்லிம்களுடன் போர் செய்தார்கள். ஆனால், வெற்றிபெறவில்லை. மக்காவிலிருந்து மதீனா சுமார் முன்னூறு மைல் தூரத்திலிருக்கின்றது. மக்காவாசிகளே மதீனாவுக்கு வந்து முஸ்லிம்களைத் தாக்கினார்கள். முஸ்லிம்கள் தற்காப்புப் போரே செய்தார்கள்.

ஹிஜிரி இரண்டாம் ஆண்டிலே, ஆயிரம் எதிரிகள் மக்காவிலிருந்து வந்து பத்ர் என்னுமிடத்தில் முந்நூறு முஸ்லிம்களால் தோற்கடிக்கப்பட்டார்கள். பத்ர் வெற்றியானது முஸ்லிம்களுக்குப் பெரிய ஆத்மீக வெற்றியாக ஏற்பட்டது.

ஹிஜ்ரி மூன்றும் ஆண்டிலே, உஹத் போரில் மூவாயிரம் பகைவர் முஸ்லிம்களை எதிர்த்தார்கள். முஸ்லிம்களுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டது. ஆனால், இருகட்சிக்கும் வெற்றிகிடைக்கவில்லை. உஹத் போரில் இருகட்சியிலும் பெண்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள், முஸ்லிம் மாதர் பலர் காயமடைந்தோருக்கு மருத்துவ உதவி செய்தார்கள். ஹஸ்ரத் ஆயிஷா, ஹஸ்ரத் உம்மு ஸலீம் முதலியோர் தண்ணீர் கொண்டுவந்து காயமடைந்தோருக்குக் கொடுத்தார்கள்! ஒரு அன்ஸாரிப் பெண் மதீனாவிலிருந்து போர்க்களத்திற்கு வந்து கொண்டிருக்கையில் அவளுடைய தகப்பன், சகோதரன், கணவன் இம்மூவரும் போரில் இறந்ததாகத் தொடர்ச்சியாக மூன்று துக்க நிகழ்ச்சிகள் அந்த மாதிடம் கூறப்பட்டன ஆனால், ஒவ்வொரு தடவையும் அந்த மாது, "பெருமானார் சுகமாயிருக்கிறார்களா?" என்று கேட்டுக்கொண்டே நடந்து வந்தார்கள். இறுதியாக, பெருமானார் சுகமாயிருக்கிறார்கள் என்று கேட்ட

வுடன், ''அப்படியானல், நான் இந்த மூன்று துக்கங்களையும் பெரிதாக எண்ணவில்லை! பெருமானர் சுகமாயிருந்தால் போதும்!'' என்ருள்.

ஹிஜிரி ஐந்தாம் ஆண்டில், மக்காவாசிகளும், யூதர்களும், பல கோத்திரங்களும் மதீனவுக்கு வந்து எதிர்த்தார்கள். முஸ்லிம்கள் மதீனவைச் சுற்றி அகழ் தோண்டினர்கள். அதனல், அதற்கு அகழ்ப்போர் என்று பெயர். அதில் ஆயிரம் முஸ்லிம்களை இருபத்து நாலாயிரம் எதிரிகள் எதிர்த்தார்கள். என்ருலும், அவர்கள் முஸ்லிம்களை அழிக்க முடியவில்லை. எல்லாப் போர்களிலும் நபி பெருமானரது தலைமையில் முஸ்லிம்கள் வெற்றியே கண்டார்கள்.

முஸ்லிம்கள் தற்காப்புப் போரே செய்தார்கள். பெருமானரின் நேர்மை, தன்னலமற்ற தன்மை, வாக்கின்படி செயலாற்றல், தோழர்களிடம் அளவு கடந்த அன்பு, அஞ்சாமை, வீரம், இறைவனிடம் தமது தூதிலும் முழு நம்பிக்கை இந்தப் பண்புகளே-வாளல்ல பெருமானரின் வெற்றிக்குக் காரணமாக அமைந்தன.

ஹுதைபிய்யா (Hudaibiyya) உடன்படிக்கை : முஸ்லிம்கள் மதீனவுக்கு வந்து ஆறு ஆண்டுகள் கழிந்தன. தாங்கள் பிறந்த இடமாகிய மக்காவுக்குச் சென்று காபாவைத் தரிசிக்க அவர்கள் விரும்பினர்கள். எனவே, ஆயிரத்து ஐநூறு முஸ்லிம்கள் மதீனவிலிருந்து புறப்பட்டு ஹுதைபிய்யா (Hudaibiyya) என்னுமிடம் வரை நபி பெருமானருடன் வந்தார்கள். ஆனல், மக்காவாசிகள் அவர்களைத் தடுத்தார்கள். பெருமானர் மக்காவாசிகளுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு மதீனவுக்குத் திரும்பிவிட்டனர். பத்து ஆண்டுகளுக்குக்காகப் போர் நிறுத்தம் செய்யப்பட்டது. முஸ்லிம்கள் மக்காவிலிருந்து மதீனவுக்கு வந்தால் அவர்களை மக்காவுக்குத் திருப்பி அனுப்ப வேண்டும், அடுத்த ஆண்டில் முஸ்லிம்கள் மக்காவுக்கு வந்து காபாவைத் தரிசிக்கலாம். இவை அந்த உடன்படிக்கையின் நிபந்தனைகள்.

ஹுதைபிய்யா உடன்படிக்கை இஸ்லாமிற்கு வெற்றியாக முடிந்தது. யுத்த நிறுத்த காலத்தில் பகைவரும் அரபியக் கோத்திரங்களும் முஸ்லிம்களுடனும் பெருமானாருடனும் நெருங்கிப் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. அதன் பலனாக, பெருமானாரின் உயர்ந்த பண்புகளையும், இஸ்லாமியப்பண்பாட்டையும் முஸ்லிம் அல்லாதார் நன்கு அறிந்தார்கள். அதன் விளைவாக, இஸ்லாத்தைப் பற்றி அவர்கள் கொண்டிருந்த தப்பெண்ணங்கள் நீங்கின. பலர் தாங்களாகவே முஸ்லிமானார்கள்.

அடுத்த ஆண்டில் பெருமானார், பத்தாயிரம் முஸ்லிம்களுடன் மக்காவுக்குச் சென்று மூன்று நாள் தங்கியிருந்து திரும்பினர்.

யூதர்களின் எதிர்ப்பு : மதீனாவைச் சுற்றியிருந்த யூதர்கள் முதலில் முஸ்லிம்களுடன் நேசமாக இருந்தார்கள். ஆனால் சில காலத்திற்குள் தங்களுக்கு வீழ்ச்சி ஏற்படலாமென்றும், தங்களுடைய வியாபாரம் அழிந்துவிடுமென்றும் நினைத்து முஸ்லிம்களை வெறுத்தார்கள். எனவே, மக்காவாசிகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினார்கள். மதீனா நகரிலும் பிளவுகள் உண்டுபண்ணினார்கள். மதீனாவிலிருந்த நயவஞ்சகர்களுடன் தொடர்பு கொண்டார்கள். மதீனாவுக்கு அருகில் இருந்த யூதர்களது கோட்டைகள் அரண் செய்யப்பட்டிருந்தன. ஆகையால், அவர்கள் முஸ்லிம்களை வெளிப்படையாக எதிர்த்தார்கள்.

முஸ்லிம்கள் மதீனாவுக்கு வந்த பிறகு மதீனாவாசிகள் இஸ்லாமிய விதிகளைப் பின்பற்றி வந்தார்கள். ஆகையால் தங்களது உயர்ந்த நிலைமையும், வியாபாரமும் அழிந்துவிடுமென்று யூதர்கள் அஞ்சினார்கள். முதலில் பெருமானார்மீதும், முஸ்லிம்கள் மீதும் பொறாமை கொண்டார்கள்; பிறகு வெறுத்தார்கள். பிறகு, மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் எதிர்த்தார்கள். ‘அஸ்ஸலாமு அலைக்கும்!’’-உங்கள் மீது

சாந்தி உண்டாவதாக! என்பதற்குப் பிரதியாக, 'அஸ்ஸாமு அலைக்கும்!' உங்கள் மீது மரணம் உண்டாவதாக! என்று திரித்துக் கூறுவார்கள். அந்த யூதர்கள் பெருமானாருடன் பேசும்பொழுது, ''ராயினா!'' நாங்கள் சொல்வதைக் கேளுங்கள்! என்பதற்குப் பதிலாக, ''ராயினா!''-நீர் ஒரு முட்டாள்! என்று தந்திரமாகக் கூறுவார்கள். சிலர் பெயரளவில் முஸ்லிமாகி, அதற்குப்பிறகு முஸ்லிம்களுக்கிடையில் பிளவு உண்டாக்குவார்கள்.

முஸ்லிம்கள் மதீனாவுக்குச் சென்றபிறகும் ஒரு பக்கம் மக்காவிலிருந்து எதிர்ப்பு. மறுபக்கம் மதீனாவிலேயே நயவஞ்சகர்களின் எதிர்ப்பு. இன்னொரு பக்கம், சுற்றுப்பக்கங்களிலிருந்த யூதர்களின் எதிர்ப்பு. இவர்கள் முதலில் தனிமையாகவும், பின்னர் கூட்டாகவும் முஸ்லிம்களை எதிர்த்தார்கள். ஆனால் இஸ்லாம் மார்க்கம் வளர்ச்சி அடைந்து கொண்டே வந்தது. ரப்பர் பந்தை எவ்வளவு வேகமாக அடிக்கிறோமோ அவ்வளவு அதிகமாக அது உயரமாகச் செல்லும். புயலில் அசைக்கப்படும் மரத்தின் வேர்களே அதிக வன்மை பெறும். அதைப்போலவே, இஸ்லாமிய வரலாற்றில் துன்பங்கள் வந்த வேளையில்தான் வளர்ச்சியும் முன்னேற்றமும் உண்டாகின்றன.

கைபர் (Khaiber) வீழ்ச்சி: யூதர்கள் இஸ்லாமை அழிக்க முயன்றார்கள். ஆனால்,அவர்கள் அம்முயற்சியில் தோல்வியடைந்து மதீனாவுக்கு வடக்கில் இருநூறுமைல் தொலைவில் இருந்த கைபர் என்னுமிடத்தில் குடியேறினார்கள். கைபர் என்றால் ''அரண் செய்யப்பட்டது'' என்று பொருள். அங்குப் பல கோட்டைகள் இருந்தன. அவற்றில் காமூஸ் என்பது மிகவும் சிறந்த கோட்டை, அங்குள்ள யூதர்கள் மதினாவில் அப்துல்லாஹ் பின் உபை என்ற நயவஞ்சகர்களுடைய தலைவருடன் தொடர்புகொண்டு இறுதியாக இஸ்லாமை அழிக்கத் தயாராகிவிட்டார்கள்.

இதைப் பெருமானார் அறிந்து, யூதர்கள் மதீனாவுக்கு வந்து எதிர்க்குமுன்னரே அவர்களைத் தடுக்க முயன்றனர். எனவே, முஸ்லிம்கள் புறப்பட்டு கைபர் சென்றார்கள். சிறு கோட்டைகளைக் கைப்பற்றினார்கள். ஆனால் காமூஸ் என்னும் கோட்டை வெல்லப்படாமலிருந்தது. இறுதியாக அதை ஹஸ்ரத் அலீ சென்றார்.

தோல்வியடைந்த யூதர்களுக்குப் பெருமானார் மத உரிமை கொடுத்து அன்புடன் நடத்தினர். அவ்வாறிருந்தும் அவர்கள் பெருமானாரை விருந்திற்கு அழைத்து விஷமிட்டுக் கொல்ல முயன்றார்கள்.

அரசர்களுக்கு அழைப்பு : ஹுதைபிய்யா உடன்படிக்கையால் முஸ்லிம்களுக்கு நன்மையே உண்டாயிற்று. அரபியாவிலுள்ள மக்கள், போர் நிறுத்தக் காலத்திலே, முஸ்லிம்களுடனும், பெருமானாருடனும் தொடர்பு கொண்டார்கள். இஸ்லாமியக் கொள்கைகளை ஆராய்ந்தார்கள். பெருமானாருடையவும், தோழர்களுடையவும் மேலான ஒழுக்கத்தை அறிந்தார்கள். அரபியக் கோத்திரங்கள் இஸ்லாத்துடன் நேசமாயிருக்கவும், இஸ்லாமை ஒப்புக்கொள்ளவும் நல்லதொரு வாய்ப்புக் கிடைத்தது. காலித் அம்ரு பின் ஆஸ் போன்ற குரைஷ் தலைவர்களும் முஸ்லிமானார்கள். இந்தச் சூழ்நிலையில்தான் அரபு நாட்டைச் சூழ்ந்திருந்த நாடுகளின் மன்னர்களான ரோம சக்ரவர்த்திக்கும், எகிப்து மன்னருக்கும், அபிஸீனிய அரசருக்கும் பெருமானார் இஸ்லாமிய அழைப்பு விடுத்தனர்.

மூத்தா (Muta) — புதிய பகைவர் : அரபியத் தலைவர் பலருக்குப் பெருமானார் இஸ்லாமிய அழைப்பு அனுப்பினர். அவர்களில் ஷாப்பில் பின் அம்ர் என்ற புஸ்ரா தலைவர் பெருமானாரால் அனுப்பப்பட்ட ஹாரிஸ் பின் உமைர் என்ற தூதரைக் கொலை செய்து விட்டார். இச்செயல் முஸ்லிம்களைப் போருக்கு அழைத்தலாகும். உடனே, பெருமானார் மூவாயிரம் முஸ்லிம்களை ஜைத் என்பவரின் தலைமையில் அனுப்பினர். இதற்குள் ஷாப்பில், ஒரு லட்சம் வீரருடன் முஸ்லிம்

களை மூத்தா என்னுமிடத்தில் எதிர்த்தார். இந்தப் போரில் தளபதி ஜைத் இறந்தபின், ஜாபர் என்பவர் அப்பதவியை ஏற்று அவரும் போர்க்களத்தில் மாண்டார். பிறகு அப்துல்லாஹ் பின் ரவாஹா என்பவர் தலைவராகி, அவரும் உயிர் துறந்தார். இறுதியாக, காலித் பின் வலீத் என்பவர் தலைமை தாங்கி வெற்றியடைந்தார். இந்தப்போர் ஹிஜ்ரி எட்டாம் ஆண்டில் ஜமாதுல் அவ்வல் மாதம் நடந்தது.

மக்கா வெற்றி: ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டில் மக்கா வாசிகள் ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு விரோதமாக நடந்தார்கள். முஸ்லிம்களை அழிக்க முயன்றார்கள். முஸ்லிம்களுடன் உடன்படிக்கை செய்துகொண்டிருந்த கோத்திரத்தாரை காயாவில் கொலை செய்தார்கள். ஆகையால், பெருமானார் பத்தாயிரம் முஸ்லிம்களுடன் புறப்பட்டுச் சென்று, இரத்தம் சிந்தாமல் மக்காவை வென்றனர். பகைவர், கொலைபாதகர், வஞ்சகர் அனைவரும் மன்னிக்கப் பட்டார்கள். அக்கால ராணுவ முறைப்படி எதிரிகள் எல்லோரையும் கொன்றுவிடும் உரிமை பெருமானுருக்கு இருந்தது. ஆனால், கருணையின் உருவாக உலகிற்கு வந்த உத்தம நபி அவர்கள் அனைவரையும் மன்னித்துவிட்டனர்.

**ஒறுத்தாருக்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றும் துணையும் புகழ்'**

என்பதற்கு எடுத்துக் காட்டாகப் பெருமானார் விளங்குகின்றனர்.

உலக வரலாற்றிலே எத்தனையோ வெற்றிகள் காணப்படுகின்றன. ஆனால், மக்கா வெற்றியைப் போன்ற, காருண்யம் நிறைந்த பூரண வெற்றியையும், இரத்தம் சிந்தப்படாத வெற்றியையும் காண்பது அரிது. ஆகையால் தான்.

**கத்தியின்றி ரத்தமின்றிக்கடும்பகையை வென்றுவிட்டீர்;**
**இத்தரையில் மக்கவெற்றிக் கிணையேது நாயகமே!**

என்று பாடுகிறார் கவிஞர்.

பெருமானார் அகதியாக மக்காவிலிருந்து வெளியேறி பதின்மூன்று ஆண்டுகள் கடந்துவிட்டன. அன்று ஹிரா குகையிலே பெருமானார் மறைந்திருந்தபொழுது, 'ஆண்டவன் நம்முடன் இருக்கின்றான்!'' என்று தோழர் அபூபக்ரிடம் கூறினர். மக்கா வெற்றி தினத்தன்று அதே இறைவனுடைய நம்பிக்கையில், ஸபா மலைமீது அமர்ந்து அந்தப் பாதகர்களை நோக்கி. ''இன்று நான் உங்களை மன்னித்துவிட்டேன்! நீங்கள் எல்லோரும் விடுதலை அடைந்தீர்கள்!'' என்றனர்.

ஹுனைன்-தாயிப் (Taif) : மக்காவுக்குக் கிழக்கில் ஹவாஸின் (Hawazin) என்றொரு கோத்திரத்தார் இருந்தனர். அவர்கள் யுத்தப் பிரியர். போரில் முதிர்ந்த அனுபவமுள்ளவர்கள். மக்கா வெற்றியை அறிந்து அவர்கள் முஸ்லிம்களை அழிக்க முயற்சி செய்தார்கள். இதையறிந்த பெருமானார், அடுத்த மாதம் பன்னிரண்டாயிரம் முஸ்லிம்களுடன் மக்காவிலிருந்து புறப்பட்டனர். தங்களுக்கு நிச்சயமாக வெற்றிகிடைக்கும் என்று முஸ்லிம்கள் கர்வங்கொண்டார்கள். ஆனால், போர்க்களத்திலே அவர்களை எதிரிகள் இரு பக்கங்களிலிருந்த குன்றுகளிலிருந்தும் அம்பு மாரி பெய்து துரத்திவிட்டார்கள். அச்சமயம் பெருமானார் மட்டும் இடம்பெயராமல் நின்றனர். பெருமானாரின் உறுதியைக்கண்டு, எல்லா முஸ்லிம்களும் போர்களத்திற்குத் திரும்பி வந்தார்கள். பகைவரைத் தோற்கடித்தார்கள். இந்தப்போரில் கவண்டி, கல்லெறியும் பொறி முதலிய நவீனப் போர்க் கருவிகளை உபயோகித்தார்கள். முஸ்லிம்களும், அவற்றை உபயோகிக்கக் கற்றுக் கொண்டார்கள். அகழ்ப் போரிலே, ஸல்மான் பார்ஸியின் ஆலோசனையைக் கேட்டுப் பெருமானார், மதினாவைச் சுற்றி அகழ்த் தோண்டி, அங்கும் ஒரு புதிய போர் முறையை ஆரம்பித்தார்களல்லவா?

ஹுனைன் போர்க்களத்திலிருந்து தப்பியோடிய எதிரிகள், அருகிலிருந்த தாயிப் என்னுமிடத்திற்குச் சென்று, கோட்டைக்குள் இருந்தார்கள். முஸ்லிம்கள் அங்கு சென்று முற்றுகையிட்டார்கள். ஆனால்,

 

முற்றுகை முடியுமுன், பெருமானார் முஸ்லிம்களுடன் திரும்பி விட்டனர். "இந்த மக்களை இஸ்லாமின் பக்கம் திருப்பி விடுவாயாக!" என்று பெருமானார் ஆண்டவனிடம் மன்றாடிப் பிரார்த்தித்தனர். ஆண்டவன் அருளால், அடுத்த ஆண்டில் அந்த மக்கள் தாமாகவே பெருமானாரிடம் வந்து முஸ்லிமாகிவிட்டார்கள்.

இந்தப் போரில் முஸ்லிம்களுக்கு ஏராளமான யுத்தக் கைதிகளும், ஆடுமாடுகளும், பொருளும் கிடைத்தன. ஆனால், பெருமானாரும் முஸ்லிம்களும் ஆறுயிரம் கைதிகளையும் விடுதலை செய்து விட்டார்கள்.

தபூக் (Tabuk) : இவ்வாறு அஹிம்சா முறையிலே இஸ்லாம் மார்க்கத்தை அரபு நாடு முழுமையும் ஒப்புக் கொண்டு விட்டது. இஸ்லாமியப் பிரச்சாரத்திலே பலவந்தம் அனுசரிக்கப்படவில்லை. தற்காப்புப் போர்களே நடந்தன.

ஆனால், ரோம சர்வாதிகாரியோ இஸ்லாத்தின் வளர்ச்சியையும், எழுச்சியையும் கண்டு அச்சங் கொண்டார். இனி, தாம் திட்டமிட்டபடி அரபு நாட்டை வெல்லமுடியாதென்று அஞ்சினார். ஆகையால் இஸ்லாமை நசுக்கிவிட ராணுவத்துடன் புறப்படத் தீர்மானித்தார். இந்த வதந்திகள் மதீனாவில் பரவின! அக்காலத்திலே ராணுவப் புகழ் பெற்றிருந்த ரோம ராஜ்யத்துடன், சின்னஞ்சிறு இஸ்லாமியக் குடியரசு எவ்வாறு போரிடமுடியும்? ரோமர்கள் எந்த நிமிடம் தாக்குவார்களோ என்ற பெரும் பீதி இஸ்லாமியத் தலைநகரான மதீனாவிலே பரவியது!

ஆனால், பெருமானார் இந்த பேராபத்தைத் தடுக்க ஆயத்தங்கள் செய்தனர். பிரமாண்டமான ரோம சேனை வடக்கிலிருந்து ஸிரியா நாட்டின் வழியாக இஸ்லாமியத் தலைநகரான மதீனாவுக்கு வருமுன்னரே, அதை தடுத்துவிட வேண்டுமென்று பெருமானார் முடிவு செய்தனர்.

முப்பதாயிரம் முஸ்லிம்களுடன் பெருமானாரும் மதீனாவிலிருந்து புறப்பட்டார்கள். கடுமையான கோடை வெயில்! அச்சமயம் மதீனாவில் பேரீச்சம் பழ அறுவடை காலம்! பழம் பறிக்காவிட்டால், ஆண்டு முழுமையும் முஸ்லிம்களுக்கு ஆகாரம் கிடையாது! மதீனாவிலிருந்த நயவஞ்சகரும் சதி செய்தார்கள்.

முஸ்லிம்கள் பதினைந்து நாட்கள் வழி நடந்து, மதீனா, திமிஷ்க் நகரங்களுக்கு இடையிலுள்ள தபூக் என்னுமிடத்தில் தாமதித்தார்கள். அப்பொழுது ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டு ரஜப் மாதம் எதிரிகளின் இயக்கத்தைப் பற்றிய செய்தி ஒன்றும் தெரியவில்லை. ஆகையால், பெருமானாரும் முஸ்லிம்களும் ஸிரியா எல்லைவரை சென்றார்கள், இருபது நாள் தங்கி இனி எதிரிகள் போரிட வரமாட்டார்கள் என்று தெரிந்த பிறகு மதீனா திரும்பினார்கள்.

தூதுகள் ஆண்டு : ஹிஜ்ரி பத்தாம் ஆண்டு பிறந்தது. அரபியாவின் பல பாகங்களிலிருந்து மதீனாவுக்குத் தூதுகள் வந்தன. இந்தத் தூது கோஷ்டிகள் பெருமானாரது இல்லத்திலும் தோழர்களது இல்லங்களிலும் தங்கின. வந்தவர்களுக்கு இஸ்லாமியக் கொள்கைகள் கற்பிக்கப்பட்டன. அவர்கள் திரும்பிச் செல்லும்பொழுது அவரவர் குலத்தாருக்கு இஸ்லாத்தைப் போதிப்பதற்காக, ஸஹாபா என்ற நாயகத் தோழர்கள் உடன் சென்றார்கள். அவ்வாறு சென்ற போதகர்களிடம் பெருமானார்,

''மக்களிடம் அன்போடு நடந்து கொள்ளுங்கள். கடுமையாக இருக்கவேண்டாம். மக்களுக்கு மகிழ்ச்சியூட்டுங்கள். நிந்திக்கலாகாது. வேதங்கள் பின்பற்றுவோர் பலரை நீங்கள் சந்திப்பீர்கள் ''சுவர்க்கத்திற்கு திறவுகோல் எது? என்று அவர்கள் உங்களைக் கேட்பார்கள், ''ஆண்டவனுடைய உண்மைக்கு உதாரணமாக இருப்பதும், நற் காரியங்கள் செய்வதுமே'' என்று மறுமொழி கூறுங்கள் என்று உபதேசிப்பார்கள்.

இவ்வாறு, வடக்கில் ஸிரியா எல்லையிலிருந்து தெற்கில் எமன் எல்லைவரை நாடு முழுமையும் இஸ்லாம் மார்க்கம் பரவிவிட்டது.

இஸ்லாம் பூரணமாயிற்று: நபிநாயகம் இறைவனுடைய தூதைக் கொண்டுவந்தனர். ஆனால், மக்கள் அதை எதிர்த்து மறுத்தார்கள். இஸ்லாமை அழித்து விட எத்தனையோ முயற்சிகள் செய்தார்கள்.

முஸ்லிம்கள் மக்காவில் பலவிதத் துன்பங்களுக்கு ஆளானார்கள். மக்காவிலிருந்து துரத்தப்பட்டார்கள். பலர் அபிஸீனியாவுக்குச் சென்று வசித்தார்கள். பெருமானாரும் முஸ்லிம்களும் மக்காவில் பதின்மூன்றாண்டுகள் பொறுமையுடன் கஷ்டங்களை அனுபவித்தார்கள். முஸ்லிம்கள் மதீனாவுக்குச் சென்ற பிறகும், எதிரிகள் ஆயுதபாணிகளாய் வந்து பலவிடங்களில் ஒன்பது ஆண்டுகள் வரை போரிட்டார்கள். இதிலும் ஆண்டவன் முஸ்லிம்களுக்கு வெற்றி அளித்தான். படிப்படியாகக் கஷ்டங்கள் குறைந்தன. அரபியாவின் ஒவ்வொரு பாகமும் இஸ்லாமியக் கொடியின்கீழ் வந்தது. லாயிலாஹ இல்லல்லாஹ்-முஹம்மத் ரஸூலுல்லாஹ் (வணக்கத்திற்கு உரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இல்லை. முஹம்மத் (ஸல்) அல்லாஹ்வின் தூதர்) என்ற பேரொலி நாட்டின் எட்டுத் திக்கிலும் முழங்கியது.

முதலில் மக்களுக்கு அறிவிக்கப்பட்ட வேத வசனங்களால் அவர்களுடைய உள்ளங்கள் தூய்மையும் அமைதியும் பெற்றன. ஆத்மிக உணர்ச்சி உண்டாகி மனமாற்றம் ஏற்பட்டது பிறகு, ஏவல் விலக்கல் சம்பந்தமான சட்டங்களையும், கட்டளைகளையும் பின் பற்றினார்கள். அதாவது இஸ்லாமியப் போதனைகள் முதலாவது எளிதான விதிகளாக கற்பிக்கப்பட்டு, மனித இயற்கைக்குத் தகுந்தவாறு, படிப்படியாகக் கஷ்டமான கட்டளைகள் சமர்ப்பிக்கப்பட்டன. மக்காவிலே, மக்களுக்கு ஆண்டவனுடைய அருள், விக்கிரக வணக்கத்தின் கேடுகள், நபிமார்களின் வரலாறுகள்,

உலகில் மனிதன் செய்யும் நற்செயல்களுக்கு மறுமையில் சுவர்க்க இன்பமும், கெட்ட காரியங்களுக்கு நரக தண்டனையும் கிடைத்தல், இறை வணக்கம், ஏழைகளுக்கு உதவி செய்தல், இவ்வாறான விஷயங்கள் போதிக்கப்பட்டன. இதன் விளைவாக, இறைவன் ஒருவனுக்கே தலைசாய்க்கும் ஒரு குழு (ஜமாஅத்) தயாராகி விட்டது.

எல்லா முஸ்லிம்களும் மக்காவிலுள்ள காபாவை நோக்கி நின்று தொழுவார்கள். தொழுகையில் தலையைத் தரைமீது வைத்து தமது தாழ்மையைத் தெரிவித்து ''அல்லாஹு அக்பர்!''-இறைவனே மகா மேலானவன் — என்பார்கள். ஒரு தலைவர் (இமாம்) முன்னணியில் நின்று தினந்தோறும் ஐங்காலப் பிரார்த்தனை நடத்துவார். இந்தத் தொழுகையே அடியானை ஆண்டவனுடன் இணைக்கும் சங்கிலியாகும். அரசனும் ஆண்டியும் உலக வேறுபாடுகளை மறந்து, ஆண்டவன் முன்னிலையில் சமமாகிவிடுவர். தொழுகை நடத்தும் தலைவர் ஒரு ராணுவத் தளபதி போன்றவர். கூட்டுத் தொழுகையில் எல்லோரும் அவரது இயக்கத்தையே பின்பற்றுவார்கள். எல்லோரும் வரிசை வரிசையாக நெருங்கி நின்று ஒருமனப்படுவார்கள். இஸ்லாமில் தொழுகையே முக்கியமானது. வெள்ளிக்கிழமைகளில் ஓர் ஊரிலுள்ள எல்லா முஸ்லிம்களும் ஒரே பள்ளிவாசலில் கூடித் தொழுவார்கள். இந்தத் தொழுகையில் குர்ஆன் ஓதப்பட்டு முஸ்லிம்களுக்குப் போதனைகளும் குத்பா என்ற சொற்பொழிவும் செய்யப்படும்.

அரபியாவின் இதர பாகங்களிலுள்ள மக்களுக்கு இஸ்லாமியப் போதனைகள் செய்யப் பலர் அனுப்பப்பட்டார்கள். இந்தப் பிரசாரகர்கள் குர்ஆனையும் இஸ்லாமியச் சட்டதிட்டங்களையும் மக்களுக்குக் கற்பித்தார்கள். பள்ளிவாசல்கள் கல்விக் கூடங்களாகவும், நீதிமன்றங்களாகவும், ஆலோசனை மன்றங்களாகவும், போதனை மேடைகளாகவும், நிர்வாக பீடங்களாகவும் உபயோகிக்கப்பட்டன.

ஏழை முஸ்லிம்களுக்கு உதவியாக ஜகாத் (Zakat) என்ற ஏழை வரி விதிக்கப்பட்டது. ஒவ்வோர் ஆண்டி லும் ஒவ்வொரு முஸ்லீமும் தமது தேவைக்கு அதிக மான வெள்ளி, தங்கம் முதலிய சொத்தில் அந்த ஆண்டின் இறுதியில் நாற்பதில் ஒரு பங்கை ஆண்டவன் பாதையில் கொடுக்க வேண்டும். இந்தப்பணம், பிராணிகள், மகசூல்கள் ஆகியவை பைத்துல்மால் என்ற பொது நிதியில் சேர்க்கப்பட்டுத் தேவையுள்ள ஏழைகளுக்கு கொடுக்கப்பட்டது.

குர்ஆன் வேதம் உலக மக்களுக்கு வழிகாட்டியாக பெருமானாருக்கு ரமலான் மாதம் இறக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சியின் இனிய ஞாபகார்த்தமாக ஆண்ட வனுக்கு நன்றி செலுத்தி, காலையிலிருந்து மாலை வரை யில அன்னம், தண்ணீர் இல்லாமல் ஒரு மாதம் நோன்பு நோர்க்கும் வழக்கம் உண்டாயிற்று. ஒரு மாதம் முடிந்தவுடன், ''ஈத்'' என்னும் பெருநாள் கொண்டா டப்படுகின்றது. ரமலான் மாதம் முழுமையும் முஸ்லிம் களெல்லாம் தக்வா என்னும் புனித வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதே குர்ஆனுடைய போதனையின் நோக்க மாகும். அத்தகைய குர்ஆன் இந்த மாதத்தில் மிகவும் போற்றப்படுகிறது. எனவே, ரமலான் மாதத்தை குர்ஆன் விழா மாதம் என்றே கூறலாம்.

கலிமா, தொழுகை, ஜகாத், நோன்பு, ஹஜ் என்பன இஸ்லாம் மார்க்கத்தின் ஐந்து தூண்களாகும். ஐந்தாவ தான, ஹஜ் என்பது உலக முஸ்லிம்கள் மக்காவுக்குச் சென்று புனித யாத்திரை முடித்தலாகும், குர்ஆன் அருளப்பட்ட ஞாபகார்த்தமாக ரமலான் கொண் டாடப்படுகின்றது. இதைப்போன்று, இப்ராஹீம் நபியுடைய மார்க்கத்தின் ஞாபகார்த்தமே ஹஜ் என்ப தாகும். ஒரே இறைவனை வணங்குதற்கு உலகில் முதலாவது கட்டப்பட்ட வணக்க ஸ்தலமே மக்காவி லுள்ள காபா என்பதாகும் இதை இப்ராஹீம் நபியும், அவரது புதல்வர் இஸ்மாயீல் என்பவரும் கட்டினார்கள். உலக முஸ்லிம்கள், அதாவது, ஒரே ஆண்டவனை வணங்குவோர், ஆண்டுக்கு ஒரு தடவை காபாவிலே கூடித் தொழுவார்கள். தகுதியும் வழிச்செலவும்

உள்ளோர் ஆயுளில் ஒரு தடவை யாயினும் ஹஜ் செய்தல்வேண்டும். உலக முஸ்லிம்கள் ஒரே இடத்தில் கூடித் தங்கள் முன்னேற்றத்திற்கான திட்டங்கள் வகுப்பார்கள்.

இவ்வாறாக, இஸ்லாத்தின் ஐந்து தூண்களும் பூரண தன்மை அடைந்தன. இவற்றை அரபு நாட்டிலே பின்பற்றி நடக்கும் சிறந்த குழு உண்டாகி விட்டது. இந்தக் குழுவின் ஒவ்வொரு நபரும் குர்ஆனுடைய போதனைகளின் செயலுருவமாக அமைந்தார். அவர்கள் மூலமாக உலகிற்கு இஸ்லாமிய ஜோதியின் கிரணங்கள் பரவின.

இஸ்லாமியப் போதனைகளின் பலனாக, உலகின் மெய்யான மானிட சகோதரத்துவம் அமைக்கப்பட்டது. நாடு, நிறம், மொழி, குலம், கோத்திரம், பணம் முதலான வேறுபாடுகளால் உண்டாகும் உயர்வு தாழ்வுகள் மறைந்தன.

ஆண்டவனைத் தவிர, வேறு எந்தப் பொருளையும், தெய்வமாக மதிக்க அரபுநாட்டு மக்கள் மறுத்தார்கள். அந்த நாட்டிலிருந்த தீய பழக்க வழக்கங்களைப் பெருமானாரின் போதனைகள் அழித்து விட்டன. எனவே, அரபு நாட்டிலே ஒரு மதம், ஒரு புதிய குழு, ஒரு புதிய நாகரிகம், ஒரு புதிய சட்டம், ஒரு புதிய அரசியல்— தோன்றின. இஸ்லாம் மதம் பகுத்தறிவு மதம். இஸ்லாம் மதம் இயற்கை மதம் இறைவனது சட்டமாகிய இயற்கையை அனுசரித்து அதைப் பின்பற்றுவதே இஸ்லாம் மதம். (குர்ஆன் 30:30) மனிதனால் பின்பற்றக்கூடிய எளிய மதம். உலகில் வந்த இறைதூதர்களையும் அவர்கள் கொண்டு வந்த வேதங்களையும் ஒப்புக்கொள்கின்ற ஒரே மதம் இஸ்லாம் மதம். எனவே தான், இஸ்லாம் மதத்தை நிறைவான மதம் என்று கூறுகிறோம்.

குர்ஆன்: வேதங்களில் இறுதியானதும் பூர்ணமானதும் குர்ஆன் வேதமாகும். இது அன்றும், இன்றும், என்றும் உலக மேதைகளால் போற்றப்படும் வேதம்.

உலகில் பெரும்பாலோர் தினசரி வாழ்க்கையில், நடைமுறையில் பின்பற்றும் வேதம். அன்று முதல் இன்றுவரை மாற்றப்படாத வேதம். உலகிற்கு உயர்வு கொடுக்கும் வேதம். மறு உலக வாழ்க்கைக்கு வழி காட்டும் வேதம். விஞ்ஞானத்திற்கும், பகுத்தறிவுக்கும், ஆராய்ச்சிக்கும் விதையிட்ட வேதம். உலக சகோதரத்துவத்தை நிறுவிய வேதம். ஒரே இறைவனை வணங்கும்படி ஊக்குவித்த வேதம். பெண்மைக்கு உயர்வளித்த வேதம். அடிமைத் தளையை அகற்றிய வேதம். மதுவை ஒழித்த வேதம். கொடிய வட்டி வாங்குவதை நிறுத்திய வேதம். பாட்டாளிக்கு சிறப்புத் தந்த வேதம். நிறத்தாலும், பணத்தாலும், பிறப்பாலும் மனிதன் உண்டாக்கிய வேற்றுமைகளை அழித்த வேதம். இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையில் தோன்றிய தரகர்களை விலக்கிய வேதம். இறை பண்புகளை மனிதனும் பின்பற்றி உயரலாம் என்று கூறிய வேதம். ஆன்ம ஒருமைப்பாட்டிற்கு வழிவகுத்த வேதம். மனிதகுலம் ஒன்று என விளம்பரஞ் செய்த வேதம். எல்லா மதத்தாரையும் அன்பு நெறியில் ஒன்று சேர்க்கும் வேதம். மனிதனை இறைவனுடைய பிரதிநிதியாக்கும் வேதம்.

குர்ஆன் போதிப்பதெல்லாம் இறைவனைப்பற்றியே. மனிதனைப் படைத்து வளர்த்துப் பாதுகாத்து, அவனுக்கு முடிவுவரை துணைநிற்கும் இறைவனைப் பற்றியே இஸ்லாம் கற்பிக்கின்றது. இஸ்லாம் என்ற சொல்லுக்கு இறைவனுக்கு கீழ்படிதல், தலைசாய்த்தல், இறைவன் விருப்பப்படி நடத்தல் என்பதே பொருள். மதம் என்பதன் நோக்கமும் அதுவே. இயற்கையின் இறைவனை வழிபடுதலே இஸ்லாம் காட்டும் நேர்வழி ஆகும். இயற்கையின் சட்டங்களுக்குத் தலைசாய்த்தலே இஸ்லாம். இந்த இயற்கையின் சட்டங்களைப் பின்பற்றலே மனித குலத்தை அதன் இறைவனோடு இணைப்பதாகும், எல்லா இனத்தாருக்கும், எல்லாக் குலத்தாருக்கும், சர்வலோகங்களுக்கும் ஒரே இறைவன் என்று உலகிலே முதலாவதாக விளம்பரஞ் செய்தது குர்ஆன் வேதம் ஒன்றே.

மேலும், உலகில் பொது வாழ்க்கை வேறு, மதம் வேறு என்றகொள்கையைக்கண்டித்து இரண்டும் மனிதனுக்குத் தேவை. மனித குலத்திற்குச் சேவை செய்யாவிட்டால், இறைவனை அடையமுடியாது. சந்நியாசமும் நிர்வாணமும் இறைவனுக்குப் பிரியமில்லாதவை என்று குர்ஆன் போதிக்கின்றது.

எனவேதான், (1) எந்த இடத்திலாயினும் தினந்தோறும் ஐங்காலப் பிரார்த்தனை (2) ரமலான் மாதம் முப்பது நாள் உண்ணு நோன்பு (3) ஆண்டின் இறுதியில் மீதமான சொத்தில் நாற்பதில் ஒரு பங்கு ஏழைவரி (ஜக்காத்) (4) எல்லா வசதிகளும் உள்ளோர் போகக் கூடிய மக்கா யாத்திரை (ஹஜ்) ஆகிய செயல்முறைகளை இஸ்லாம் கற்பிக்கின்றது. இவற்றில் தொழுகையும் நோன்பும் ஆத்மாவைச் சுத்திகரித்துப் பரிபக்குவ படுத்திப் புனிதமாக்குகின்றன.

''ஹஜ்'' என்னும் கடமையைப்பற்றித் தமது 'இஸ்லாமின் போதனைகள்' என்னும் நூலில் ஸர் தாமஸ் ஆர்னல்ட் என்னும் ஆங்கிலேயர் கூறுவதாவது:

''உலகின் எல்லாப் பாகங்களிலிருந்தும் ஒவ்வோர் ஆண்டிலும் வந்து கூடும் பல இனத்தார்களும், பல மொழியாளர்களும் வெகு தூரத்திலுள்ள அவர்களது வீடுகளிலிருந்து ஒவ்வொரு வேளையும் எந்தத் திசையை நோக்கித் தொழுவார்களோ அந்தப் புனிதமான இடத்திலே முஸ்லிம்கள் ஒன்று சேரவேண்டுமென்று இஸ்லாம் விதிக்கின்றது.

''எல்லோரும் ஒரே குலம்; எல்லோரும் ஒரே சகோதரர்'' என்னும் கொள்கைகளை விசுவாசிகளின் உள்ளத்திலே பதிப்பதற்கு இத்தகைய (ஹஜ்) முறையை உருவாக்கிய மதத்தலைவர் சாதாரணமானவரல்லர். இங்கு அனைவரும் ஒன்றுகிக் கூட்டுப் பிரார்த்தனை என்ற பெரும் புனிதப் பணியினைச் செய்வதிலே, மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து வந்த கருப்பு நிற நீக்ரோ,



 

தூரக்கிழக்கு நாட்டிலிருந்து வந்துள்ள சீன நாட்டானைச் சந்திக்கின்றான். நாகரிகமுள்ள துருக்கியர், மலாயாக் கடலின் கீழ் கோடித் தீவிலிருந்து வரும் முறட்டு மனிதனைத் தன் சகோதரனாக ஏற்றுக்கொள்ளுகின்றான். ஹஜ்ஜுப்பெரு நாளன்று முஸ்லிம் உலகில் ஈத்கா (தொழுமிடம்)களிலே முஸ்லிம்கள் தொழுது மக்காவில் ஹஜ் செய்வோருக்காகவும் இறைவனிடம் பிரார்த்தனை புரிவார்கள். அங்கு இன நிற பண வேறுபாடுகள் கிடையா. எல்லோரும் ஒரே சமத்துவ நிலையில் இருப்பார்கள். உலகப் போக்குவரத்துச் சாதனங்கள் துரிதப்பட்டதன் விளைவாக, இந்தச் சகோதரத்துவத்தின் அனுகூலங்கள் இன்னும் அதிகமாகப் பெருகலாம்.

அறுபதுகோடி மக்கள் பின்பற்றுகின்ற இந்த இஸ்லாமே உலகின் குறைகளை யெல்லாம போக்கவல்லது. உலகப் பிரச்சினைகளை யெல்லாம் தீர்க்கும் ஒரேயொரு சக்தி நான் இதைப் பொழுதுபோக்கும் பெருமைக்காகக் கூறவில்லை. நிகழ்ச்சிகள் இதை நிரூபிக்கின்றன. மேற்கு ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் என்ன நடக்கின்றதென்று கூர்மையுடன் ஆராய்வோர் இதன் உண்மையை அறிய முடியும். ஏனென்றால் உண்மையான சர்வதேச சங்கம் என்ற கொள்கையானது இஸ்லாம் மதத்தில்தான் செயல் முறையில் காணப்படுகின்றது.

''இன்றைய முஸ்லிம் உலகம்'' என்னும் நூலிலே ஸ்னவ்க் ஹுர்க்ரோஞ்சி என்பவர் கூறுவதாவது.—

''ஏனையோரைவிட இஸ்லாமே மானிட சர்வதேச சங்கம் என்ற குறிக்கோளை அடைந்திருக்கின்றது முஹம்மத் நபியுடைய மதத்தின் அடித்தளத்தில் உருவாக்கப்பட்ட சர்வதேச சங்கமானது வேற்றினத்தார் அனைவரும் வெட்கப் படும்படியான முறையிலே மனித இனத்தாரெல்லாம சமநிலை உள்ளோரே என்ற கொள்கையைக் கையாளுகின்றது''.

இஸ்லாம் மதம் இயற்கை மதம். இஸ்லாம் மதம் குழப்பங்கள் இல்லாத மதம். நடைமுறையில் செய லாற்றும் மதம். ஒவ்வொரு மனிதனும் தினசரி வாழ்க் கையில் பின்பற்றக் கூடிய மதம். இஸ்லாம் மதம் சிக்கலான புதிர்கள் இல்லாத மதம். இஸ்லாம் மதம் குருட்டு நம்பிக்கை இல்லாத பகுத்தறிவு மதம். ஒரே இறைவனை அடையச் செய்யும் மதம். எல்லா நபிமார் களாலும் பின்பற்றப்பட்ட மதம்.

இறுதி ஹஜ் : நபி நாதரை இறைவன் எந்தப் பணிக்காக உலகினுக்கு அனுப்பினுனே, அந்த வேலை முடிந்து விட்டது. எனவே இனி பெருமானார் ஆண்டவ னிடம் திரும்பிச் செல்லும் காலம் வந்துவிட்டது. குர் ஆனில் நஸ்ர்'—உதவி என்னும் அத்தியாயம் இதை குறிப்பிடுகின்றது.

''அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வரும் பொழுது இறைவழியில் மக்கள் கூட்டம் கூட்டமாய் வருவதைப் பார்ப்பீர்கள். எனவே, உங்கள் இரட்ச கனைப் புகழ்ந்து போற்றுங்கள். அவனிடம் பாதுகாவல் தேடுங்கள். மெய்யாகவே அவன் (நீங்கள் அழைக்கும் பொழுது உங்கள் பக்கம்) திரும்புகின்றவனுக இருக் கின்ருன்'' (அல்நஸ்ர்—குர்ஆன்)

ஹிஜ்ரி பத்தாம் ஆண்டில், ஓர் இலட்சத்து இரு பத்து நாலாயிரம் முஸ்லிம்களுடன் பெருமானார் மக்கா வுக்குச் சென்றனர். அந்தத் தல யாத்திரை—இறுதி— ஹஜ்—ஹஜ்ஜத்துல் வதா—எனப்படுகின்றது. அப் பொழுது, அரபியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும் முஸ்லிம்கள் வந்திருந்தார்கள், ஹஜ் செய்யும் முறை களை மக்களுக்குப் பெருமானுர் செய்து காட்டினுர்கள். அந்த ஹஜ்ஜுக் காலத்திலே, மக்காவின் அருகிலுள்ள அரபாத் என்னும் மலைமீது அமர்ந்து, பெருமானுர் ஆற்றிய அறவுறைகள் சரித்திரச் சிறப்புள்ளவையாகும். அறபாத் அறவுரைகள் மானிட சாசனமாகக் கருதப் படுகின்றன.

 

அரபாத் (Mt. Arafat) அறவுரைகள் :

''மக்களே! என் வார்த்தைகளைக் கவனமாகக் கேளுங்கள்! இனி நான் உங்களைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்காமல் போகலாம்.

இன்று என்ன நாள் என்று உங்களுக்குத் தெரியுமா இது யவ்முந் நஹ்ர்—தியாகத்தின் புனித நாள்.

இது என்ன மாதம் என்று உங்களுக்குத் தெரியுமா? இது புனிதமான மாதம்.

இது எந்த இடம் என்று உங்களுக்குத் தெரியுமா? இது புனிதமான நகரம்.

எனவே, இந்தப் புனித நாளைப்போல, இந்தப் புனித மாதத்தைப் போல, இந்தப் புனித நகரத்தைப் போல உங்கள் ஒவ்வொருவரது உயிர், பொருள் கண்ணியமெல்லாம் புனிதமாகக் கொள்ள வேண்டுமென்று நான் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

எனக்குப் பிறகு நேர்வழி தவறி ஒருவர் கழுத்தை மற்றவர் துணிக்கத் தயாராகி விடாதீர்!

மக்களே! உங்களுக்கு உங்கள் மனைவியரிடம் உரிமைகள் இருப்பது போலவே, உங்கள் மனைவியருக்கும் உங்களிடம் உரிமைகள் உண்டு. ...உங்கள் மனைவியரை, அன்பாய் நடத்துங்கள்.

அடிமைகளை நன்ருக நேசியுங்கள். நீங்கள் உண்பதை அவர்களுக்குக் கொடுங்கள். நீங்கள் அணியும் வஸ்திரங்களை அவர்களுக்கு அணிவியுங்கள், அவர்கள் குற்றஞ்செய்தால் அவர்களை மன்னியுங்கள்; அல்லது அவர்களை விடுதலை செய்யுங்கள். ஏனென்றல் அவர்களும் உங்களைப்போல அல்லாஹ்வின் அடியார்களே. அவர்களைத் துன்பப்படுத்தாதீர்கள்,

மக்களே! நான் சொல்வதைக் கேளுங்கள்! எல்லா முஸ்லிம்களும் சகோதரர்களே. நீங்கள் அனைவரும் ஒரே சகோதரத்துவத்தைச் சேர்ந்தோர். உங்கள் சகோதரன் உள்ளன்புடன் கொடுக்காவிட்டால், அவனது பொருளை நீங்கள் உபயோகிக்கக்கூடாது.

இன்று நான் உங்களிடம் ஒரு பொருளை விட்டுச் செல்கின்றேன். அதை நீங்கள் உறுதியாகப் பிடித்துக் கொண்டால், வழி தவறமாட்டீர்கள். அது இறைவனுடைய வேதம்.

இங்கு இருப்போர், இங்கு இல்லாதோரிடம் என் உபதேசத்தைச் சொல்லுங்கள். நேரில் கேட்டவற்றை மக்கள் மறந்துவிடக்கூடும். ஆனால், நேரில் கேட்டோர் மூலமாகக் கேட்டவற்றை மக்கள் நன்கு நினைவில் வைப்பதுண்டு.

பிறகு, ''ஆண்டவன் என்னைப்பற்றி உங்களிடம் கேட்டால் நீங்கள் என்ன சொல்வீர்கள்?'' என்று பெருமானார் வினவ, இலட்சத்திற்கு அதிகமான குரல்கள்,

''இறைவனுடைய தூதை எங்களுக்கு நீங்கள் சமர்ப்பித்துவிட்டீர்கள் என்று நாங்கள் கூறுவோம்'' என்று மறுமொழி தந்தன,

இதைக்கேட்ட நபிகள் நாதர் வானத்தின் பக்கம் விரலை உயர்த்தி, ''இறைவா! நீ இதற்குச் சாட்சியாய் இரு'' என்றனர்.

அச்சமயம், ''நாம் இன்று உமக்காக உமது மதத்தைப் பூரணமாக்கினோம். மேலும், நம்முடைய கொடையை உம்மீது பூரணமாக்கினோம். மேலும், உமக்காக இஸ்லாம் மார்க்கத்தை தெரிந்தெடுத்தோம்'' என்ற குர்ஆன் வசனம் வெளியாக்கப்பட்டது.

இருபத்திரண்டு ஆண்டுகளுக்குமுன் நபிநாயகம் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தபொழுது ஒன்றிரண்டு பேர் பின்பற்றினார்கள். ஆனால், இன்று ஒன்றேகால் லக்ஷம் மக்களின் குரல் ''அல்லாஹு அக்பர்'' என்ற குரல் எழுப்பியது.

மன்னர் முஹம்மத் : அரபு நாடெங்கும் இஸ்லாம் ஒளி வீசியது. அந்த நாட்டு வரலாற்றிலே முதல் தேசீயத் தலைவரும், முதல் மன்னரும் பெருமானாரே. உலகினில் பெரிய தீபகற்பமான அரபியாவிலே அதற்கு முன் மத்திய அரசாங்கமே கிடையாது. எல்லோரும் பெருமானாரைத் தங்கள் அரசியல் தலைவராக ஏற்றுக் கொண்டார்கள். மாகாணங்களுக்கு அதிபர்களை நிய மித்துப் பெருமானார் அனுப்பினர். அந்த அதிபர்கள் மக்களுக்கு இறைநெறியைக் கற்பித்து நீதி வழங்கினார் கள். ஏழைவரி (ஜகாத்) வசூலித்தார்கள், அந்த அரசியலில் காவல் கூட்டங்களும் காவல்படைகளும் கிடையா. மக்கள் குற்றம் செய்தல் அரிது. குற்றம் செய்தவன் தானே வந்து குற்றத்தை ஒப்புக்கொள் வான். நாம் செய்வதை ஆண்டவன் பார்க்கிறான் என்று எல்லோரும் உணர்ந்தார்கள். இவ்விதமான ஆட்சியை உலகில் நிறுவுதலே இஸ்லாத்தின் நோக்க மாகும். இது ஹுகூமதுல் இலாஹி—இறைவன் ஆட்சி (Kingdom of God on earth) எனப்படும். இவ்வாறு பரலோக ராஜியம் இவ்வுலகில் செயலளவில் பெருமா னாரால் நிறுவப்பட்டது.

**செல்வம் துற்றகாலைத் தெய்வமும் சிறிது பேணார்**
**சொல்வன அறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்**
**வெல்வதே நினைவதல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்**
**வல்வினை விளைவுமோரார் மண்ணின்மேல் வாழுமாந்தர்.**

செல்வமும், அதிகாரமும், பதவியும், பெருமையும் வந்தவுடன் சிலர் இறைவனை மறந்துவிடுவர். ஆனால், நபி நாயகமோ இவைகளை மறந்த இன்ப வாழ்க்கையை விரும்பவில்லை. வீட்டு வேலைகளைச் செய்வார், அடுப்பு மூட்டுவார். இல்லம் கூட்டுவார், பால் கறப்பார். கடைக்குப்போவார். அனாதைக் குழந்தை,வாலிபர், தோழர், கணவர், தந்தை, போதகர், வீரர், தயாளர், மன்னர், நபி இவ்வாறான பல்வேறு நிலைகளில், உயர் வை விரும்பாத வாழ்க்கையை நடத்தினார்.

**சொல்லுதல் யார்க்கும் எளிது அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.**

ஆனால், பெருமானார் தாம் பிறருக்குப் போதித்த வற்றைத் தாம் முதலில் செயலாற்றிய பிறகே போதிப் பார். அதனால் தான் அன்னார் வாழ்க்கையானது ''செயல் உருவ வாழ்க்கை'' என்று போற்றப்படு கின்றது.

''இறைவா! என்னை இங்கு ஏழையாக வைத்து, மறு உலகில் ஏழைகளுடன் எழுப்பு'' என்பார்.

இகலோக வாழ்க்கையின் முடிவு : நபித்துவத்தின் பணி பூரணமாகி, ஒரே இறைவன் (தவ்ஹீத்) என்ற கொள்கை உலகினில் ஒளிவீசும் வரை நபிநாயகத்தின் வாழ்க்கை அவசியமாயிருந்தது. அந்த வேலை முடிந்த வுடன் ஆண்டவனிடமிருந்து அழைப்பு வந்துவிட்டது எனவே, இறுதி ஹஜ் முடிந்த சிலகாலத்தில், ஹிஜ்ரி பதினோராம் ஆண்டு, ஸபர் (Safar) மாதம் பெருமானா ருக்குக் காய்ச்சல் உண்டாயிற்று. கொஞ்சம் உடல் நல மானபோது பள்ளிவாசலுக்குச் சென்று மக்களுக்கு நல்லுபதேசம் செய்தனர். அதில்,

''ஆண்டவன் தன் அடியானுக்கு, இந்த உலக வாழ்க்கை அல்லது இறைவனுடன் இருக்கும் வாழ்க் கை, இந்த இரண்டில் ஒன்றை ஏற்றுக்கொள்ளும்படி விரும்புகின்றான், அடியான் பிந்தியதை ஏற்றுக் கொண் டான்'' என்றனர்.

இதன் பொருளை ஹஸ்ரத் அபூபக்ர் அறிந்தார். மக்காவிலிருந்து புறப்பட்டுக் குகையில் மூன்றுநாள் மறைந்திருந்த காலமுதல் நகமும் சதையும் போல, பூவும் மணமும் போல, உடலும் உயிரும் போல, பிரி யாத வாழ்வு நடத்திய ஹஸ்ரத் அபூபக்ர் உடனே மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தார்,

மறுநாள் பெருமானார் பள்ளிவாசலுக்குச் செல்ல முயன்றனர். ஆனால் அளவுகடந்த பலவீனமாயிருந்தது. ஆகையால், தமக்குப் பிரதிநிதியாக ஹஸ்ரத் அபூபக்ர் தொழுகை நடத்த வேண்டுமென்று பெருமானார் கட்டளையிட்டார்.

மறுபடியும் சுகமடைந்தனர். அப்பொழுது ஒரு நாள் பள்ளிவாசலை அடுத்திருந்த தமது இல்லத்தின் திரையை அகற்றி நின்று கொண்டு முஸ்லிம்கள் இறை வணக்கம் செய்வதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தனர்.

ஆனால் மறுபடியும் நோய் அதிகரித்தது. உடல் நலம் குன்றி பலவீனம் உண்டாகிவிட்டது. ஹிஜ்ரி பதி னோராம் ஆண்டு ரபியுல் அவ்வல் மாதம் பன்னிரண் டாம் தேதி திங்கட்கிழமை மாலையில் (கி. பி. 632 ஜூன் 11) தமது அறுபத்து மூன்றும் வயதில் பெரு மானார் இறைவனிடம் சேர்ந்தனர்.

அறுபத்து மூன்றாண்டு அருமுறையில் வாழ்ந்துநெறி
நிறுவியபின் மறைவதற்கோ நிலத்துதித்தீர் நாயகமே!

---

## எம்பெருமானார் - ஒரு சொல்லோவியம்

நபிகள் நாயகத்தின் உடல் அமைப்பு மிக உயரமாகவோ, மிகச் சிறியதாகவோ, குள்ளமாகவோ இல்லை. அன்னார் தனித்து நடந்துசெல்லுகையில், குட்டையான உருவமுடையோர் என்று மக்கள் எண்ணுவார்கள். ஆனால், மற்றொருவருடன் நடந்து செல்லுகையில், மற்றவரைவிட உயரமாகக் காணப்பட்டனர். நடுத்தரமான உயரமே மிகச் சிறந்ததென்று பெருமானார் கூறுவர்.

பெருமானாரது நிறம் மஞ்சள் சிவப்போ அல்லது மற்றெந்த நிறத்தின் கலப்போ இல்லாமல், மிக வெண்மையோ, கோதுமை நிறமோ இல்லாத வெண்மையாக இருந்தது.

பெருமானார் சிவப்பு நிறமுடையோர் என்று சிலர் வர்ணித்துள்ளார்கள். மேலும், அதற்குப் பொருந்த அமைவதற்காக முகம், கழுத்து காது போன்ற காற்றும் வெயிலும் படும்படித் திறந்திருக்கும் உறுப்புகளெல்லாம் சிவப்பாகவும், ஆடையால் மூடப்பட்டிருந்த மற்றப் பகுதிகளெல்லாம் தூய வெண்ணிறமாகவும் இருந்தன என்று கூறியுள்ளார்கள். தலை முடியானது முரடாகவோ, அதிக அடர்த்தியாகவோ இல்லாமல், முழுமையும் கீழே தொங்காமல் சுருண்டிருந்தது. அதை வாரிவிடும்போது, கடல் அலைபோன்ற தோற்றத்துடன் காது மடல்களின் வழி, தோள் வரை வீழ்ந்து கிடந்தது. சில சமயங்களில் ஒவ்வொரு காதின் மீதும் ஒன்றாக காதுகளை யொட்டிய கழுத்துப் பகுதி தெரியுமாறு இரண்டு பிரிவுகளாக அதைப் பிரித்துப் பெருமானார் வாரிவிடுவர். தலைமுடியிலும் தாடியிலும் பதினேழு நரை முடிகளே இருந்தன. அதற்குமேல் இருந்ததே இல்லை.

மற்றவர்களைவிட நபிகள் நாதரின் முகமானது மிக அழகாக இருந்தது. அதை வர்ணித்தோர்கள் எப்பொழுதும் முழுமதியுடன் ஒப்பிட்டார்கள். கோபத்தையும் மகிழ்ச்சியையும் அந்த அழகிய முகத்தோற்றத்திலிருந்தே தெளிவாக அறிந்து கொள்ள முடியும். ''நலம் நாடும் பெருமானாரின் முகப்பொலிவு, முழுமதி தண்கதிர் வீசும் இருளற்ற இரவினைப் போல் ஒளியுடன் விளங்கியது'' என்று அரிய நண்பர் ஹஸ்ரத் அபூபக்ர் கூறுகின்றார்.

நாயகத்தின் நெற்றி அகன்றிருந்தது. மெலிந்து நீண்டு அடர்ந்திருந்த கண் புருவங்களுக்கிடையே வெள்ளி போன்ற பளபளப்பு இருந்தது. கண்கள் அகன்றும், பெருத்தும், ஆழ்ந்தும் செவ்வரியினிடைக் கருத்த கண்மணியுடனும் இருந்தன. கண் இமைகள் ஒன்றையொன்று சந்திப்பன போன்று அவ்வளவு அடர்த்தியாக நீண்டிருந்தன. மூக்கு பொருத்தமாக நீட்டுப்போக்கில் சாய்ந்திருந்தது. பற்கள் இடையிடையே சிறிது இடம்விட்டு அமைந்திருந்தது. பெருமானார் சிரிக்கும்போது, அவற்றின் சுடரொளியானது மின்னொளி போன்றிருந்தது. வாயின் இதழ்கள் கண்ணைக் கவரும் வனப்புடையன. கன்னக் கதுப்புகள் தளர்ச்சியின்றி உறுதியுடன் இருந்தன. முகம் நீளமாகவோ வட்டமாகவோ இல்லாமல், உருண்டையாக இருந்தது. தாடி அடர்த்தியாக இருந்தது, மீசையைக் கத்தரித்துக் கொண்டுவிட்ட போதிலும், தாடியைக் கத்தரித்து விடாமல், தானே வளருமாறு விட்டுவிட்டனர். கழுத்து மற்றவர்களுடையதைவிட மிக அழகாக, நீளமோ குட்டையோ இல்லாதிருந்தது, கதிரவன் ஒளியும் காற்றும் படுமாறு திறந்திருந்த காற்றுப் பகுதி தங்கம் பூசிய வெள்ளிக் கலசத்தை ஒத்திருந்தது.

 

எத்தகைய கெட்ட எண்ணங்களும் இல்லாத பெருமானாருடைய நெஞ்சம் அகன்று பரந்திருந்தது. அதனுடைய எந்தப் பகுதியிலும் தசை தனித்து மேலே தெரியவில்லை. அது சமமாகவும் மழமழப்பாகவும் பளிங்குபோன்றிருந்தது. மார்பு முதல் கொப்பூழ்வரை மெல்லிய கோடுபோல் மூடி பரவியிருந்தது. அடர்ந்த முடி வளரப்பெற்ற இரண்டு தோள்களும் அகன்றிருந்தன, முதுகு அகன்றும். தோள்கள் கணுக்கால், அக்குள்கள் எல்லாம் சதைப்பற்றுள்ளனவாகவும் இருந்தன. வலது தோள்பட்டை எலும்பின் அருகே முத்திரை போன்ற ஒரு குறி இருந்தது. அதைச் சுற்றிலும் அடர்ந்த முடியுள்ள சிறிது மஞ்சள் கலந்த ஒரு கருமையான மரு இருந்தது. இரண்டு தோள்களும் கைகளும் செறிந்த சதைப்பற்றுள்ளன. மணிக்கட்டு நீண்டும், உள்ளங்கைகளும், பாதங்களும் பரந்து அகன்றிருந்தன. கைவிரல்கள் வெள்ளிபோன்றிருந்தன. தொடைகளும் கெண்டைக்கால்களும் சதைப் பற்றுடனிருந்தன. எப்பொழுதும் மணம் வீசும் உள்ளங்கை, பட்டுப்போன்று மென்மையாக இருந்தது. முதுமைக் காலத்திலும் பெருமானார் பிறந்த குழந்தை போன்ற உடற்கட்டும், தசைப்பற்றும் உடையோராயிருந்தனர், பெருமானரது நடைத்தோற்றம் உறுதியாகவும் காலடி நிலையானதாகவும் இருந்தன. நடக்கும்பொழுது முன்னே சாய்ந்து, காலடிகளை ஒன்றோடொன்று நெருக்கமாக வைப்பார். மற்றவர்களுடன் ஒப்பிட்டு நோக்கும்போது, தாம் ஆதம் நபியை அதிகம் ஒத்திருந்ததாகவும், ஒழுக்கத்திலும் உடற்கட்டிலும் தந்தையார் இப்ராஹீம் நபியை ஒத்திருந்ததாகவும் பெருமானார் கூறுவர்.

# 2. பெருமானாரின் பண்பு நலன்கள்

(நபியே!) மெய்யாகவே, நீர் மகத்தான
நற்குணத்தில் இருக்கின்றீர். —(குர்ஆன்)

ஒருவர் ஒருநாள் நபிநாயகத்தின் குணச் சிறப்புகளைப் பற்றி ஆயிஷா அம்மையாரிடம் விசாரித்தார். அவருக்கு அந்த அம்மையார், 'குர்ஆன் போதனைகளே நபிநாயகத்தின் குணச்சிறப்புகள்; அதாவது பெருமானாரின் முழு வாழ்க்கையும் குர்ஆனுடைய போதனைகளின் விரிவுரையாக இருந்தது'' என்று மறுமொழி கூறினார்.

**திருநபியின் திருவாழ்வு திருமறையின் திருவுருவென்**
**றருவினிரே நாயகியார் ஆயிஷாவும் நாயகமே!**

பெருமானாரின் புனிதத் தன்மை, தயாளம், நட்பு, வீரம், மன்னித்தல், வெட்கம், அடக்கம், இரக்கம், தரும குணம், தாளாண்மை - முதலிய குணங்கள் தனிச் சிறப்புள்ளனவாகும். குர்ஆன் காட்டிய வழியில் நடப்பதிலும், மக்களுக்கு உள்ளன்புடன் சேவை செய்வதிலும் பெருமானார் மக்களுக்கொரு முன்மாதிரியாகத் திகழ்ந்தனர்.

**ஊனேறி உயிரேறி உதிரத்தில் ஊற்றெடுத்து**
**வானேறி நிற்குமுறை விளங்கியருள் நாயகமே!**
**இருட்டறையில் இடறிவிழும் இனத்தவர்க்கு இஸ்லாத்தின்**
**பெருவிளக்கைப் பிடிக்கவந்த பெருமானே நாயகமே!**

''உயர்ந்த வழிகாட்டியும், மேலான முன்மாதிரியுமாக இறுதித் தீர்ப்புநாள்வரை இருக்கும்படியான சிறந்த மார்க்கத்தைக் காண்பிக்கும் ஒருவர் மனித வர்க்கத்திற்குத் தேவையாக இருந்தார். அந்த ஒருவர் நானே. ஒரே இறைவனுக்குப் பிறகு வேறு இறைவன் இல்லை. அதைப் போலவே எனக்குப் பிறகு

வேறு இறைவன் இல்லை அதைப் போலவே எனக்குப் பிறகு வேறு இறைதூதர் (நபி) இல்லை. நான் மனித குலத்திற்காக ஒரு திட்டத்தைக் கொடுத்துவிட்டுச் செல்கிறேன். அந்தத் திட்டத்திலே வாழ்க்கையின் எல்லாத் துறைகளுக்கும் அவசியமான அம்சங்கள் அடங்கியிருக்கின்றன. என்னுடைய இந்தத் திட்டமானது இயற்கைச் சட்டம்போன்று குறை ஒன்றுமில்லாமல், எல்லா மக்களும் இறுதித் தீர்ப்புநாள்வரை பின்பற்றக் கூடியதாகவும் இருக்கின்றது. இதில், எத்தகைய தவறுக்கும், விவாதத்திற்கும், சந்தேகத்திற்குப் இடமில்லை.

என்னுடைய வாழ்க்கையானது எனது இந்த அறை கூவலுக்கும். போதனைக்கும் சான்றாகும். எனது வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்டு உங்கள் ஐயப்பாடுகளையும் ஆட்சேபனைகளையும் நீக்கிக்கொள்ளுங்கள்.'' —நபிமொழி

**அருமை மிகு மதத்துறையில் அரசியலில் சமூகத்தில்**
**பொருளியலில் தலைமையினைப் பூண்டிருக்கும் நாயகமே!**

பெருமானாருடைய உபதேசமானது மனிதன் அடையக் கூடிய உச்சநிலையையும், அதை அடைவதற்கான வழிகளையும் விளக்குகின்றது. மேலும், இறைவனுடைய பண்புகளைப் பிரதி பிம்பிக்கும் கண்ணாடியான வாழ்க்கையாகும். அந்த உபதேசம் ஒரு கோத்திரத்திற்கோ, இனத்திற்கோ, நாட்டிற்கோ குறிப்பிட்டு வரவில்லை. எல்லா மக்களுக்கும், எல்லாக் காலங்களுக்கும், எல்லா சூழ்நிலைகளுக்கும் அது உரியதாகும். மனிதன் அகத்திலும் புறத்திலும் உயர்ந்த பண்பாட்டை அடையக்கூடும். அறிவிலும், ஒழுக்கத்திலும், ஆன்மீகத்திலும் உயர்வடையலாம். மேலும் பெருமானாரின் உபதேசம் பகுத்தறிவிற்கும் தர்க்கரீதிக்கும் ஏற்றதாக அமைந்திருக்கின்றது.

பெருமானாரது பெருங்குணங்கள் உயர்விலும், தாழ்விலும், வறுமையிலும், செம்மையிலும், மக்களுக்

கோர் முன்மாதிரியாக அமைந்துள்ளன. குர்ஆன் காட்டிய விதிகளை அப்படியே செயலாற்றிய பெருமை பெருமானாருக்கே உரியது. பிறருக்குப் போதித்த வற்றையெல்லாம் தமது அன்றாட வாழ்க்கையில் செய்துகாட்டிய சிறப்பும் திருநபிக்கே உரியதாகும். எத்தனையோ பெரியார்கள் சொல்லளவிலே போதித்துச் சென்றார்கள். ஆனால் போதனைகளின்படி நடந்து காட்டிய செயலுருவம் முஹம்மத் நபி ஒருவரே. உலக வரலாற்றிலே இத்தனை உயர்ந்த குணங்களெல்லாம் ஒரே மனிதரிடம் கூட்டாகக் காணப்படுதல் பெருமானார் ஒருவரிடமே.

கணவரின் குறைகளையும் இரகசியங்களையும் மனைவியர் நன்கறிவர். ஆனால், நபிநாயகத்துடன் வசித்து, அன்னாருடைய அந்தரங்கங்களை எல்லாம் அறிந்தோர் அனைவரும் அன்னாரைப் புகழ்கின்றார்கள். இதுவே, பெருமானாருடைய தனி உயர்வுக்குச் சாலச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

'நபிநாயகத்தின் ஒழுக்கம் குர்ஆனே!' என்றார் ஆயிஷா அம்மையார்.

ஹிரா குகையிலே, ஜிப்ரீல் என்ற வானவர் வந்து, பெருமானாருக்கு முதல்முதலாக இறைதூதரைப்பற்றி அறிவித்து விட்டு மறைந்தார். பெருமானார் மனக்கலக்கத்தால் உள்ளம் நடுங்க, இல்லம் வந்து, தனது மனைவி கதீஜா பிராட்டியிடம் அதைப்பற்றித் தெரிவித்தனர். அப்பொழுது அந்த அம்மையார் அஞ்சவேண்டாமென்று சமாதானம் கூறி, பெருமானாருடைய நற்குணங்களை வர்ணிக்கிறார். அதாவது :—

''ஒருபோதுமில்லை, இறைவன்மீது பிரமாணமாக-இறைவன் உங்களைக் கைவிடமாட்டான். ஏனென்றால், நீங்கள் உறவினரை ஆதரிக்கிறீர்கள். மக்களது துன்பத்தைத் துடைக்கின்றீர்கள். ஏழைகளுக்கு பணவுதவி செய்கின்றீர்கள். விருந்தினரை உபசரிக்கின்றீர்கள், கஷ்ட காலத்தில் மக்களுக்கு உதவி செய்கிறீர்கள்;'' என்றார்.

குழந்தைப் பருவத்திலே பெருமானார் பெற்றோரை இழந்து அனாதையாகிவிட்டனர். தாயின் அன்பும், தகப்பன் பராமரிப்பும் அறியாமல் வளர்ந்தனர். குழந்தையாகவும், சிறுவராகவும், வாலிபராகவும் இருந்த நிலைமைகளில், கவலை நிறைந்தோராகவும், சிந்தனை செய்வோராகவும் பெருமானார் வாழ்க்கை நடத்தினர். மனிதப் பருவத்திலே, முன்மாதிரியான தூயவாழ்க்கையை மேற்கொண்டனர், ஏழைகளுக்கும் உதவியற்றோருக்கும். உதவியளிக்க எப்பொழுதும் ஆயத்தமாயிருப்பார். இறைவனது படைப்புகள் எல்லாவற்றின் மீதும் அனுதாபமும் அன்பும் இரக்கமும் கொள்வார். கர்வமற்ற பெருமானாரின் நடையைக் கண்டு, 'அதோ போகின்றார்? அல் அமீன்! நம்பிக்கைக்கு உரியவர்! உண்மை சொல்வோர்! நேர்மையாளர்!'' என்று மக்கள் சுட்டிக் காட்டுவார்கள்.

நண்பனிடம் மெய்யான அன்பு, மனைவியுடன் உண்மையான உறவு, இறைவனிடம் பரிசுத்தமான பக்தி பிறப்பு இறப்பு இவற்றின் இரகசியங்களை ஆராய்ந்து அறிவதில் ஆர்வம், குறிக்கோள் பாதையிலே எத்தனைத் துன்பங்கள் வந்தாலும் இடறிவிழவில்லை நம்பிக்கை இழக்கவில்லை, தமக்கு இறைவன் கொடுத்த பணியை நிறைவேற்றுவதில் வீர உள்ளத்துடன் வெற்றிப் பாதையிலே அடிமேல் அடி எடுத்து வைத்து நபிநாயகம் சென்றுகொண்டிருந்தனர்.

பரம விரோதிகளின் பலத்த எதிர்ப்புகளுக்கிடையில் பெருமானார் வெற்றி வேந்தராக விளங்குகின்றனர். அன்னாரது மகத்தான நற்குணங்களே அந்த வெற்றிக்குக் காரணங்களாக அமைந்தன. உலகினில் மிகப் பெரிய தீபகற்பமான அரபியாவிலே கொலை, களவு, சூது, மதுபானம், உருவ வணக்கம் முதலியன மலிந்து கிடந்த அந்த நாட்டிலே, இருபத்தைந்து ஆண்டுகளாகப் பெருமானார் செய்த சீர்திருத்தங்கள் அனைத்தும் உலக வரலாற்றிலே இணையில்லாதனவாகும். பல தெய்வ வழிபாடு நின்றது. நாடெங்கும் மக்கள் ஒரே ஆண்டவனைத் தொழுதார்கள் மூடநம்பிக்கைகள்

ஒழிந்தன. பகுத்தறிவு உயர்விடம் பெற்றது. பெண்கள் நிலை உயர்ந்தது. மதுபானம் மறைந்தது. சூதாட்டம் தொலைந்தது கல்விக்குச் சிறப்பிடம் கிடைத்தது வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் மக்கள் தூய்மை அடைந்தார்கள். பெருமானாரின் முன்மாதிரியான வாழ்க்கையிலே அற்புதங்கள் நிறைந்து மக்களை மயக்க வில்லை. எல்லா மக்களும் பின்பற்றிச் செயலாற்றக் கூடிய வாழ்க்கையே பெருமானாரின் வாழ்க்கை. அந்த வாழ்க்கையானது காட்டுமிராண்டிகளை நாடாளும் மன்னராக்கியது. அநாகரிக அரபியரை உலகிற்குக் கல்வியும் நாகரிகமும் கற்பிக்கும் ஆசிரியராக்கியது. உலகம் தோன்றிய நாள்முதல் மத்திய அரசாங்கம் என்பதையே அறியாத அரபியருக்கு உண்மையான மக்களாட்சி அளித்தது. அரபியாவில் உதித்த ஒளி யானது உலகெல்லாம் பரவி, இன்று அறுபது கோடி மக்களை ஒரே இறைவன் வணக்கத்தில், ஒரே சகோதரத் துவத்தில் இணைத்து விட்டது. பெருமானாரது பெரு வழியை, இன்றைய நாகரிக அரசாங்கங்கள் படிப்படி யாகப் பின்பற்றுகின்றன. அவ்வாறு செய்யாதிருந் தால் அழிவு ஏற்படுமென்று பெர்னுட்ஷா முதலிய மேதைகள் அபிப்பிராயப்படுகின்றார்கள். ஆகையால் தான்,

''உலகங்களுக்கெல்லாம் கருணையாக அனுப்பப் பட்டவர்'' என்று பெருமானாரை குர்ஆன் கூறுகிறது. ஒரு தனிப்பட்ட நாட்டிற்கல்ல, இனத்திற்கல்ல, காலத் திற்கல்ல ஆனால் ''உலகங்களுக்கெல்லாம்'' என்று கூறுவது உற்று நோக்கத்தக்கது.

இறை வழிபாடு: உடலுடன் உள்ளமும் ஒன்று படாத வணக்கத்தை இறைவன் ஏற்றுக் கொள்வதில்லை என்பது நபிமொழி. எப்பொழுதும் பெருமானார் இறைவனை மறக்காமல் இருப்பார். ஒவ்வொரு வேலை யும், ''பிஸ்மில்லாஹ்-ஆண்டவன் பெயரால்'' என்று ஆரம்பிப்பார். ஐங்காலப் பிரார்த்தனைகளோடு, வேறு பலமுறைகளிலும் இறைவனை நினைப்பார்.

ஆழ்ந்து சிந்தனை செய்வதிலும், இயற்கையின் இரகசியங்களை ஆராய்வதிலும், இறை வணக்கத்திலும் பெருமானார் காலங் கழிப்பர். எங்கும் எதிலும் இறைவனையே காண்பர், இரவின் பயங்கரமான நிம்மதியிலும், அகன்ற ஆகாயங்களிலும், அளக்க முடியாத வெளியிலும், நட்சத்திரங்களின் விட்டு விட்டுப் பிரகாசிக்கும் பிரகாசத்திலும் ஒப்பற்ற உயர்வுள்ள பெருமானார் ஆண்டவனையே காண்பர்.

இரவிலே நின்று கொண்டு நீண்டநேரம் இறை வணக்கம் புரிவார். அதனால் கால்களில் வீக்கம் வந்து விடும். ஒரு நாள் ஆயிஷா அம்மையார், "நாயகமே! உங்கள் பாவங்களையெல்லாம் ஆண்டவன் மன்னித்து விட்டானே. ஏன் இவ்வளவு அதிகமாக வணக்கம் செய்கின்றீர்கள்?" எனக் கேட்டார். அதற்கு விடையாகப் பெருமானார், "நான் நன்றியுள்ள நல்லடியானாக இருக்கவேண்டாமா?" என்றனர்.

இறைவன் மீது முழு நம்பிக்கை :

**வேண்டுதல் வேண்டாமை யிலான் அடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல.**

பெருமானாருக்கு இறைவனிடம் முழு நம்பிக்கை இருந்தது, எத்தனையோ துன்பங்கள் வந்தாலும் அந்த நம்பிக்கையில் சற்றும் தளரவில்லை. சன்மார்க்கப் பாதையில் செல்லும்பொழுது, எதிர்நோக்கிவரும் இன்னல்களைப் பொறுத்துக்கொண்டு, தமது புனித வேலையைத் தொடர்ச்சியாகச் செய்து கொண்டிருந்தனர்.

ஒருநாள் பெருமானார், "இஸ்லாம் என்றால் என்ன?" என்று மக்களுக்குப் போதித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது, அபூ ஜஹ்ல் (Abu Jahal) என்னும் கடும் பகைவன் அங்கு வந்தான். பெருமானார் மீது மண்ணை வாரி வீசினான். "மக்களே! இந்த மனிதன் பொய்யன்! இவனது வார்த்தைகளில் மயங்கிவிடாதீர்"

என்று பலவாறாக ஏசிப் பேசி எதிர்த்தான். ஆனால் கருமமே கண்ணாக இருந்த நபிபெருமானார், அந்த பகைவன் பக்கமாகத் திரும்பியும் பார்க்கவில்லை. மக்களுக்கு இறைவனைப் பற்றிப் போதித்துக் கொண்டே இருந்தனர்.

ஒரு சமயம் நபி நாயகம் காட்டில் தனிமையாகப் படுத்திருந்தனர். உடன் வந்தோர் சிறு தொலைவில் இருந்தார்கள். அரபியா நாட்டிலே ஒவ்வொருவரிடமும் தற்காப்பிற்காக உடைவாள் இருக்கும். பெருமானார் தமது வாளை அருகிலிருந்த மரத்தில் தொங்கவிட்டு விட்டுப் படுத்திருந்தனர். அச்சமயம் பகைவன் ஒருவன் பதுங்கி வந்தான். தொங்கிக் கொண்டிருந்த வாளை எடுத்தான்! ஓங்கினான்! ' முஹம்மதே! உம்மை இப்பொழுது யார் காப்பாற்றுவார்?'' என்று கேட்டான். அப்பொழுது பெருமானார் கூறிய மறுமொழி என்ன?

'' அல்லாஹ்! ''

என்றனர். ''அல்லாஹ்!'' என்று வெகு அமைதியுடனும், இறைவனிடம் முழு நம்பிக்கையுடனும் கூறினர். அந்த வார்த்தையில் காந்த சக்தி இருந்தது. பகைவன் பயந்தான். ''அல்லாஹ்!'' என்ற வார்த்தையைக் கேட்டு நடுங்கினான். அவன் கையிலிருந்த வாள் நழுவியது! கீழே விழுந்தது.

உடனே, அதே விநாடியில் அந்த வாளைப் பெருமானார் எடுத்து, ''இப்பொழுது உன்னை யார் காப்பாற்றுவார்?'' என்றனர். ''நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்'' என்றான் அந்தப் பகைவன். அப்பொழுது பெருமானார், நான் உன்னைக் கொல்ல மாட்டேன்! நான் உன்னை விட்டுவிட்டேன். என்னிடமிருந்து காருண்யத்தைக் கற்றுக்கொள்!'' என்று கூறினர்.

**வாய்மை :**

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

எச்சமயத்திலும் உத்தம நபி உண்மையே பேசுவர். ஒரு நாளல்ல; பதின்மூன்று ஆண்டுகளாக மக்கா நகரிலே எதிரிகள் எள்ளி நகையாடினார்கள், நிந்தித்தார்கள், துன்புறுத்தினார்கள், கல்லெறிந்தார்கள், சமுதாய விலக்குச் செய்தார்கள். கொலைச் சதி செய்தார்கள். ஆனால், பெருமானார் தமது தற்காப்பிற்காக நேர்மையான முறைகளையே கையாண்டனர், ஆயுள் முழுதும் எப்பொழுதாயினும் பொய் சொல்லவே இல்லை. கடும் பகைவனான அபூ ஜஹல் என்பானும் பெருமானார் பொய்யர் என்று குற்றம் சாட்டவில்லை. ''முஹம்மதே! நீர் பொய்யர் என்று நான் கூறவில்லை. ஆனால், நீர் போதிப்பது உண்மையல்ல'' என்றான்.

தமது புதல்வர் அலீ இஸ்லாம் மார்க்கத்தை ஒப்புக் கொண்டார் என்று தெரிந்த அபூ தாலிப் அவரிடம், 'என் மகனே! நலத்தைத் தவிர வேறொன்றின் பக்கம் வரும்படி முஹம்மத் உன்னை அழைக்க மாட்டார். ஆகையால் நீ அவரைப் பின்பற்றியிருக்க உனக்கு உரிமையுண்டு' என்று கூறினார்.

மக்காவிலே குரைஷியருக்குப் பெருமானார் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்த ஆரம்ப காலத்திலே ஒரு நாள் பெருமானார், அந்தக் கோத்திரத்தாரை ஸபா (Safa) மலையடிவாரத்தில் அழைத்துக் கொண்டு போய், ''குரைஷ் மக்களே! இந்த மலைக்குப் பின்புறம் ஒரு பெரியசேனை பதுங்கியிருக்கிறதென்று நான் உங்களிடம் சொன்னால் நீங்கள் என்னை நம்புவீர்களா!'' என்று கேட்க அந்த மக்கள், ''நிச்சயமாக நாங்கள் நம்புவோம். ஏனென்றால், நீர் எப்பொழுதாயினும் ஒரு பொய் சொன்னதில்லை'' என்று மறுமொழி கூறினார்கள்

பகைவரும் போற்றும் குணம்: உரோம சக்ரவர்த்திக்குப் பெருமானார் இஸ்லாமிய அழைப்பு விடுத்தனர். அச்சமயம் மக்காவின் தலைவரும், நபி நாயகத்தின் கடும் பகைவருமான அபூ ஸுஃப்யான் (Abu Sufyan) அந்த நாட்டிலிருந்தார். எனவே, அபூ ஸுஃப்யானை உரோம சக்ரவர்த்தி அழைத்து விசாரித்தார்.

உரோம சக்ரவர்த்தி : அபூ ஸுப்யானே! இந்த (முஹம்மத்) நபியின் குடும்பம் உயர்ந்ததா? தாழ்ந்ததா?

அபூ ஸுப்யான் : உயர் குடும்பமே.

உரோம சக்ரவர்த்தி : அக்குடும்பத்தில் எவரேனும் நபியென்று தோன்றினார்களா?

அபூ ஸுப்யான் : இல்லை.

உரோம சக்ரவர்த்தி : இந்த இஸ்லாம் மதத்தை ஒப்புக் கொண்டவர்கள் ஏழைகளா? செல்வந்தர்களா?

அபூ ஸுப்யான் : ஏழைகள்.

உரோம சக்ரவர்த்தி : இந்த நபியைப் பின்பற்றியோர் அதிகரிக்கின்றனரா? அல்லது குறைகின்றனரா?

அபூ ஸுப்யான் : அதிகரித்துக் கொண்டுதான் இருக்கின்றார்கள்.

உரோம சக்ரவர்த்தி: எப்பொழுதாயினும் இந்த நபி பொய் சொன்னதுண்டா?

அபூ ஸுப்யான் : இல்லை.

உரோ சக்ரவர்த்தி : எப்பொழுதாவது அவர் உடன்படிக்கைக்கும் வாக்குறுதிக்கும் மாற்றமாகச் செய்திருக்கிறாரா?

அபூ ஸுப்யான் : இதுவரை செய்யவில்லை.

உரோம சக்ரவர்த்தி : எப்பொழுதாவது நீங்கள் அவருடன் போர் செய்திருக்கின்றீர்களா?

அபூ ஸுப்யான் : ஆம்.

உரோம சக்ரவர்த்தி : போரின் முடிவு என்ன?

அபூ ஸுப்யான் : சிலசமயம் நாங்கள் வெற்றி பெற்றோம். சிலபோது அவரது கை மேலோங்கியது.

**உரோம சக்ரவர்த்தி: அவரது போதனைகள் என்ன?**

அபூ ஸுப்யான் : ஒரே இறைவனை வணங்குங்கள், எதையும் இறைவனுக்கு இணைவைக்காதீர்கள். தொழுங்கள். புனிதமான வாழ்க்கை நடத்துங்கள். உண்மை பேசுங்கள். உறவினரை ஆதரியுங்கள் என்று அவர் போதிக்கின்றார்.

இவ்வாறு கூறினார் இஸ்லாத்தின் கடும் பகைவர் அபூஸுப்யான் பெருமானாரது இத்தகைய மேலான குணங்களே இஸ்லாமியப் பிரச்சாரத்திற்குத் துணையாக இருந்தன.

## கருணை :

**கண்ணோட்ட மென்னும் கழிபெரும் காரிகை**
**உண்மையான் உண்டு இவ்வுலகம்**

சகல உலகங்களுக்கும் அருட்கொடையாக அனுப்பப்பட்டோர் அண்ணல் நபி, பெருமானார் எப்பொழுதும் பகைவரிடம் கருணையோடு நடந்தார்கள். மக்கா வெற்றியின்போது தீராப்பகை கொண்டோரிடமும் எம்பிரான் காட்டிய கருணையானது உலக வரலாற்றிலே இணையற்றதாகும்.

## மன்னித்தல் :

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல்**

தீங்கு செய்தோரை மன்னிக்கும் குணம் எம்பிரானிடம் இயற்கையாகவே குடிகொண்டிருந்தது. பெருமானார் மக்காவிலிருந்து மதீனா செல்லும்பொழுது ஸுராகா பின் ஜுஅஷூம் என்பவர் வந்து தாக்கினார். பலமுறை வாளைப் பிரயோகித்தார். அத்தகைய பகைவரை மக்கா வெற்றியின் போது பெருமானார் மன்னித்து விட்டனர், உஹுத் (Uhad) போரிலே பெருமானாரின் பெரிய தந்தை ஹஸ்ரத் ஹம்ஸா (Hamza)

வைக் கொன்ற வஹ்ஷி என்பவனையும், போரில் இறந்த முஸ்லிம்களின் குடல்களைப் பிடுங்கி மாலையாகப் போட்டு, ஹஸ்ரத் ஹம்ஸாவின் ஈரலை மென்றவளும். அபூ ஸுஃப்யானது மனைவியுமான ஹிந்தா என்னும் கொடிய மாதையும் மன்னித்தனர். ஆகாரத்தில் விஷங்கலந்து தம்மைக் கொல்ல முயன்ற யூதப் பெண்ணையும் மன்னித்தனர்.

அபூ ஜஹல், அவர் புதல்வர் இக்ரிமா, மற்றும் பிறரும் இஸ்லாத்திற்கும் பெருமானாருக்கும் கடும் பகைவர். உஹத் போரிலே அபூ ஜஹல் மாண்டு போனார். ஆனால், மக்கா வெற்றி தினத்தன்று எல்லோரையும பெருமானார் மன்னிப்பதைக் கண்டு இக்ரிமா முஸ்லிமாகிவிட்டார். அபூ ஜஹலை அன்றுமுதல் எவரும் நிந்திக்கக் கூடாதென்று பெருமானாரது கட்டளை பிறந்தது!

உஹத் போரிலே, பெருமானார் காயமடைந்து, உடலிலிருந்து இரத்தம் வடியஆரம்பித்தது. அப்பொழுது அங்கிருந்த முஸ்லிம்கள் சிலர் எதிரிகளைச் சபிக்கும்படி பெருமானாரிடம் கேட்டுக்கொண்டார்கள். அப்பொழுது பெருமானார் சபித்தார்களா? இல்லை "என் இறைவன் என்னைக் கருணையாக அனுப்பினான். மக்களை சபிப்பதற்காக அல்ல!" என்று கூறி, இருகரங்களையும் உயர்த்தி, "ஆண்டவனே! இந்த மக்கள் அறியாதோராவர். ஆகையால், இவர்களை மன்னிப்பாயாக!" என்று இறைவனைப் பிரார்த்தித்தார்கள்.

பலகாலமாகப் பண்பற்ற முறையில் எதிர்த்த மக்களை மக்கா வெற்றியிலே மன்னித்த மாநபியின் மாண்பானது மனுக்குல வரலாற்றிலே தனி இடம் பெற்றதாகும்.

## வீரம் :

இத்தகைய இணையற்ற இரக்கமும், இன்னல் இழைத்தோரை மன்னிக்கும் தன்மையும், இளகிய உள்ளமுள்ள பெருமானார் வீரத்திலும் தலைசிறந்து விளங்கினர்.

வாழ்க்கையானது அறவாழ்க்கை, மற (வீர) வாழ்க்கை என்று இருவகைப்படும். அன்பு நெறியிலே இல்லறம் நடத்தல் அறவாழ்க்கையாகும். அருள் மேவிய வீரநெறியில் வெற்றி பெறும் வாழ்க்கை மற வாழ்க்கையாகும்.

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

பகைவர் நிறைந்த மக்காவிலே, பெருமானார் தலை நிமிர்ந்து அச்சமென்பதே இல்லாமல் செல்வது வழக்கம். பெரும் போர்க் களங்களிலே போர் வீரரெல்லாம் மனந்தளர்ந்து பின்னடைந்தாலும், ஓடிவிட்டாலும் எம்பிரான் மட்டும் வீரத்துடன் தனியாய் நிற்பர். நெருக்கடியான வேளையிலே பெருமானாரே சேனையின் முன்னணியிலே எல்லோருக்கும் முதல்வராக நிற்பது வழக்கம். ஹஸ்ரத் அலீ போன்ற உயிர்த் தோழர்களுங்கூட பெருமானாரின் முதுகுப்புறம் நின்றே எதிரிகளுடன் போர் புரிவார்கள்.

ஒரு சமயம் மதீனா நகரிலே எதிரிகள் இரவிலே திடீர் பிரவேசஞ்செய்து முஸ்லிம்களைத் தாக்கிவிடுவார்கள் என்ற பயமும் பீதியும் இருந்தது. அந்த நேரம் பயங்கரமான நேரம்! நெருக்கடியான வேளை! இருள் நிறைந்த இரவு! ஆனால், அந்த வேளையிலும் பெருமானார் துணையின்றித் தனிமையாக நகருக்கு வெளியே சென்று நாற்புறமும் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பினர். திரும்பியபின், ''அச்சமொன்றுமில்லை!'' என்று மக்களுக்குத் தைரியமூட்டினர்.

''கடும்போரிலே நாங்கள் பெருமானாருக்குப் பின்புறமே ஒதுங்குவோம். எதிரிகளுக்குச் சமீபத்தில் பெருமானாரே நிற்பர்'' என்று ஹஸ்ரத் அலீ கூறுகின்றார்.

தளபதி, வெற்றிவேந்தர் என்ற நிலைமைகளில் பெருமானார் தனிச் சிறப்புக்கு உரியவர். பெருமானார்

பிறக்குமுன் தகப்பனார் மறைந்தார். ஆறும் ஆண்டில் தாயார் மறைந்தார். பன்னிரண்டாம் ஆண்டில் பாதுகாவலாயிருந்த பாட்டனார் இறந்தார். அப்பால் பெரிய தகப்பனாரது ஆதரவில் இருந்தனர். எனவே கல்விப் பயிற்சியோ, ராணுவ பயிற்சியோ பெறுவதற்கான வாய்ப்புக் கிடைக்கவில்லை.

குழந்தைப் பருவத்திலே பாலூட்டிய கிராம அரபியருடனும், வாலிபத்திலே வணிகத்திலும் பெருமானார் காலங் கழித்தனர். வணிகக் குடும்பத்தில் ராணுவப் பயிற்சி எங்கிருந்து கிடைக்கும்?

பெருமானார் ஐம்பது வயதிற்குமேல் போர்களில் ஈடுபட பலவந்தப்படுத்தப்பட்டனர். மேலும், முஸ்லிம்களை எதிர்த்தோர் இயற்கையில் போர்ப் பிரியரும், வீரர்களுமாயிருந்தனர். அவ்வாறிருந்தும் உரோமர்களுடன் நடந்த போரிலும் பெருமானாருக்கு வெற்றியே கிடைத்தது.

எதிரிகளுடன் போர்க்களத்தில் நிற்கும்பொழுது அனுபவம் முதிர்ந்த சேனாதிபதியைப் போல் நடந்து கொள்வர். எத்தனையோ கோத்திரங்களுடன் செய்த போர்களில் பற்பல போர் முறைகளைக் கைக்கொண்டனர். அத்தனை முறைகளிலும் வெற்றியே கண்டனர்.

யுத்த களத்திலே நல்லதொரு இடத்தில் பாசறை அமைப்பது உயர் தளபதிக்கு அவசியமல்லவா? பதர் போரில் பெருமானார் நின்ற இடம் மழை பெய்த பிறகு இன்னும் கடினமாயிற்று. ஆனால் எதிரிகளான குரைஷிகள் நின்ற இடம் சேறாகிவிட்டது.

அக்கால அரபியப் போர்களில் மல்யுத்தம் நடப்பது வழக்கம். பெருமானார் நல்ல மல்வீரர்களைப் பொறுக்கியெடுத்து அனுப்புவார். மேலும், சேனையின் வலது இடது மத்திய அணிகளில் நல்ல வீரர்களையே தலைவர்களாக நியமிப்பர்.

யுத்த காலத்திலே, ஒற்றர் மூலம் பகைவரின் நிலையை அறிவதிலும், இருண்ட இரவுகளில் பகை வரது திடீர்த் தாக்குதல்களினின்றும் தப்புவதிலும், பகைவரின் வலிமையைக் குறைப்பதற்காக அவர் களுக்கு துணைப்பொருள்களும் ராணுவக் கருவிகளும் கிடைக்காமல் தடுப்பதிலும் பெருமானார் தலைசிறந்து விளங்கினர்.

விடாமுயற்சி, தோல்வி காணப்பட்டாலும் மனந் தளராமை, இறைநம்பிக்கை போன்றதுணங்கள் ஒரு தளபதிக்கு மிகவும் அவசியமாகும். ''எத்தனையோ துன்பங்கள் நேர்ந்த பொழுதும் இருகைகளிலும் சந்திர சூரியனை வைத்தாலும் என் கடமையிலிருந்து பின் வாங்கமாட்டேன்'' என்ற மனவுறுதி. பகைவர் குகை யின் வாயிலில் வருவதைக்கண்டு பயந்த தோழர் ஹஸ்ரத் அபூபக்ரிடம், ''நாம் இருவரல்ல! நாம் மூவர். இறைவன் நம்முடன் இருக்கின்றான்!'' என்ற இறை நம்பிக்கை-இவற்றை உலகம் போற்றாமல் இருக்க முடியுமா?.

யுத்தகளத்திலே குழந்தைகள். பெண்கள், வயோ திகர் இவர்களைக் கொலை செய்தல் விளைச்சல் நிலங் களைப் பாழாக்கல், பழமரங்களை வெட்டல். மிருகங் களைக் கொல்லல், வீடுகளுக்கு நெருப்பிடல் முதலிய வற்றைச் செய்யலாகாது என்று பெருமானார் கட்டளை யிட்டனர்.

போரில் தோல்வியடைந்தோரிடமும், போர்க் கைதிகளிடமும் பெருமானார் மெல்லினமாகவும் அன்பா கவும் நடந்துகொள்வார். அக்கால அரபியர் போர்க் கைதிகளைக் கொன்றுவிடுவார்கள். ஆனால், பெரு மானார்,அவர்களை விடுதலை செய்துவிடுவார். தரித்திரத் திலிருந்த நாயகத் தோழர்கள், தாங்கள் பட்டினியி லிருந்து தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட கைதிகளுக்கு நல்ல உணவைக் கொடுப்பார்கள்.

வெற்றியடைந்த பிறகு தமது பகைவருடன் பெருமானார் நடந்துகொண்ட தன்மையை உலக வரலாற்றிலே காண்பதரிது. மக்கா வெற்றியின்போது நடந்த நிகழ்ச்சிகள் ஓர் அற்புதத்தைப் போலவே தோன்றுகின்றன. பெருமானாரையும் இஸ்லாத்தையும் அழித்துவிட சகல முயற்சிகளும் செய்துவந்த அபூஸுப்யானும், குரைஷிகளும் மன்னிக்கப் படுகிறார்கள். கடும் பகைமை காட்டிய அபூ ஸுப்யானுக்கு மரியாதை கொடுக்கப் படுகின்றது. ''மக்காவிலுள்ள காபாவுக்கு சமமானது அவர் வீடு'' என்று கூறப்படுகின்றது. அன்று அந்த நாட்டு வழக்கப்படி அனைவரும் கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆனால், எல்லோரும் மன்னிக்கப் படுகின்றார்கள்.

தளபதியானவர் தமது சாதாரண சிப்பாய்களுடைய இன்ப துன்பங்களில் கலந்துகொள்ள வேண்டும். அகழ்போரிலே, அகழ் தோண்டும்பொழுது பெருமானார் சாதாரண சிப்பாய் போன்று மண்தோண்டினார்கள், மண்சுமந்தார்கள். வறுமையால் எல்லா சிப்பாய்களுடன் பட்டினி இருந்தார்கள். எப்பொழுதும் போர்க்களத்தில் முதலாவது முன்னேறிச் செல்வோர் பெருமானாரே; ஹஸ்ரத் அலீ போன்ற பெருவீரர்களெல்லாம் பின்னால் நிற்பார்கள்.

தளபதிகளை நியமிப்பதில் பெரிய குடும்பத்தாரையோ பணக்காரரையோ நியமிக்காமல் அதற்குத் தகுந்தவர் அடிமையானாலும் அத்தகையோரையே நியமிப்பார்கள். பகைவருக்காக ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்பார்கள். அவர்களைச் சபிக்கமாட்டார்கள்.

இத்தகைய வீரமும் இரக்கமும் கலந்த தளபதியை உலக வரலாற்று ஏடுகளில் காணமுடியுமா?

**போரிடத்தில் பெயர் பொறித்த புரவிமிசைப் புலி அலியார்**
**பாரிடத்தில் உமது வீரம் பகர்ந்தனரே நாயகமே!**

**உடன்படிக்கை:** பிறருடன் செய்த உடன்படிக்கைப் பிரகாரமே பெருமானார் நடந்தனர். அதனால் தமக்கும் முஸ்லிம்களுக்கும் துன்பங்கள் பல வந்துற்ற போதும், தமது வாக்கை மீறி நடக்கவில்லை இஸ்லாத்தின் பகைவர் உடன் படிக்கைகளை அடிக்கடி முறித்தார்கள். ஆனால், பெருமானார் அவர்களைப்போல ஒரு தடவையாவது செய்ததில்லை. மேலும், ''உடன்படிக்கையைக் காப்பாற்றாதவன் மதம் இல்லாதவன்!'' என்று கூறுவர்.

ஹுதைபிய்யா உடன்படிக்கையால் முஸ்லிம்களுக்குத் துன்பம் விளைந்தது. என்றாலும், அதன் நிபந்தனைகளுக்கு விரோதமாகப் பெருமானார் நடக்கவேயில்லை.

''மக்காவிலிருந்து மதீனாவுக்குத் தப்பிவந்த முஸ்லிம்களை உடனே மக்காவாசிகளிடம் திருப்பி அனுப்பி விடவேண்டும்'' என்பது ஹுதைபிய்யா உடன்படிக்கையில் ஒரு நிபந்தனை. மக்காவில் சித்திரவதை செய்யப்பட்ட முஸ்லிம்கள் அதைப் பொறுக்க முடியாமல், அங்கிருந்து தப்பியோடி மதீனாவுக்கு வருவார்கள். திரும்பிச் செல்ல உடன்படமாட்டார்கள். மரணமும் சித்திரவதையும் வேண்டுமென்று விரும்பி அவர்கள் மக்காவுக்குத் திரும்பிச் செல்வார்களா? கெஞ்சுவார்கள்; ஹஸ்ரத் உமர் போன்றவர்களிடம் சிபார்சு செய்யச் சொல்வார்கள். ஆனால், பெருமானாரோ, ''உடன்படிக்கைக்கு விரோதமாக நடக்க மாட்டேன் போங்கள். இறைவன் உங்களுக்கு ஒருவழி வகுப்பான்! பொறுமையை மேற்கொள்ளுங்கள்!'' என்று கூறி மதீனாவிலிருந்து வெளியேற்றிவிடுவதே வழக்கம்.

**சொன்ன சொல் தவறாமை:** பல சீர்திருத்தவாதிகளும் மேதைகளும் தீர்க்கதரிசிகளும் தங்கள் போதனைகளை ஏடுகளில் எழுதி வைத்துவிட்டுச் சென்றனர். சிலர் நாவால் நவின்றனர். ஆனால், வாழ்க்கையில் செய்து காட்டவில்லை. சொல்லுதல் யார்க்கும் எளிது ஆனால், சொல்லியவண்ணம் செய்தல் அரிது. நபி நாயகம்

சொல்லியவாறே செய்து காட்டினர். உலக வரலாற்றிலே சொல்லும் செயலும் ஒன்றுபட்ட பெருமை நபி நாயகத்துக்கே உரியது.

அபில்ஹமா உடைய புத்திரர் அப்துல்லாஹ் என்பவர் கூறுகின்றார் :-

''நான் ஒரு நாள் பெருமானாருடன் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். பேச்சு முடியுமுன் நான் வேறொரு இடத்திற்குச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது. போகும்போது, 'நீங்கள் இங்கே இருங்கள். நான் உடனே வந்து உங்களுடன் மறுபடியும் பேசுவேன்' என்றேன்' நான் சென்றேன். ஆனால், நான் நபி நாயகத்திடம் கூறியதை மறந்து விட்டேன். மூன்று நாட்கள் கழிந்துவிட்டன. மூன்றாம் நாள் அந்த வழியாக வந்தேன். என்ன பார்க்கின்றேன்? பெருமானார் அதே இடத்தில் நின்று கொண்டிருக்கக் கண்டேன்! வெட்கத்தால் நான் தலை குனிந்தேன் மன்னிப்புக் கோரினேன், ஆனால், அந்த அண்ணல் நபியின் மறுமொழி என்ன? 'நீர் என்னைக் கஷ்டத்தில் வைத்து விட்டீர். நான் அந்த நேரத்திலிருந்து, இப்பொழுதுவரை உமக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றேன்' என்று சாந்தமான முறையில் கூறினர்.

அடக்கமும் பணிவும் : அக்காலத்திலே, உரோம சக்ரவர்த்திகளும், பாரசீகப் பேரரசர்களும், கிறிஸ்தவ உலகத் தலைவராயிருந்த போப்புகளும் தங்களைக் கடவுளர்களாக மக்கள் மதிக்க வேண்டுமென்று எண்ணியதோடு, பகிரங்கமாகவும் சொன்னார்கள். சிலர் தங்களைக் கடவுள் என்று கும்பிடும்படியும் கட்டளையிட்டார்கள். இந்தச் சூழ்நிலையிலே, பெருமானார், ''நண்பர்களே! நான் ஓர் அரபிய மாதின் புதல்வனே! உங்களைப் போன்ற ஒரு மனிதனே!' என்றனர். இன்னொரு சமயம் மக்களை நோக்கி, ''நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? நான் ஓர் அரசனல்லன்! வெயிலில் உலர்த்திய மாமிசத்தைப் புசித்த ஓர் அரபிய மாதின் மகனே நான்!'' என்று கூறினர்.

பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

அரபியாவின் அரசராக இருந்தபொழுதும், பெருமானார் எளிய வாழ்க்கை நடத்தி அடக்கத்துடனும் பணிவுடனும் இருந்தனர். எல்லா வேலைகளையும் தமது கையாலே செய்வது வழக்கம். தாம் செய்யக்கூடிய வேலையைப் பிறர் செய்யும்படி அனுமதிப்பதே கிடையாது. தினந்தோறும் ஆடுகளுக்குப் பால் கறத்தல், ஆடைகளைக் கழுவுதல், செப்பனிடுதல், பாதரட்சைகளைச் செம்மைப்படுத்தல், வீட்டைப் பெருக்கிச் சுத்தஞ் செய்தல் முதலிய வேலைகளைப் பெருமானார் செய்வர் மஸ்ஜித் நபவீ என்ற பள்ளிவாசலை மதீனா நகரில் கட்டும்பொழுது, மண்தோண்டும்பொழுதும் கட்டிட வேலையிலும் பங்கெடுத்துக் கொண்டனர். ஓய்வு கிடைத்தபொழுது வேலைக்காரருக்கு உதவி செய்வர். கடைக்குப்போய் தமக்காகவும் பிறருக்காகவும் குறிப்பாக வயது முதிர்ந்தோர், பலவீனர் முதலியோருக்காகவும் சாமான்கள் வாங்கி வருவது வழக்கம்.

ஒரு நாள் ஒரு யூதன் விருந்தாளியாக வந்தான். பெருமானார் அவனுக்கு வயிறு நிறைய ஆகாரம் கொடுத்துத் தமது போர்வையையும் கொடுத்துத் தூங்குவதற்காகத் தமது அறையையும் கொடுத்தார்கள். ஆனால், அந்த யூதன் இரவில் அந்த அறையில் மலங்கழித்து அசுத்தமாக்கி விட்டான். எனவே, பயந்து அங்கிருந்து அதிகாலையில் ஓடிப்போனான். ஆனால், அவன் மறதியாகத் தனது வாளை அறையில் வைத்து விட்டான். ஆகையால், அதை எடுக்க மறுபடியும் வந்தான். என்ன பார்க்கின்றான்? பெருமானாரே அவன் மலங்கழித்த ஆடைகளையும் அந்த அறையையும சுத்தஞ் செய்துகொண்டிருந்தனர்!

நாயகத் தோழர்கள், ''எங்கள் எஜமானே!'' ''உலகினில் உத்தமரே!'' என்று அழைத்தால், அவ்வாறு அழைக்கலாகாது என்று பெருமானார்

தடுத்துவிடுவர். மக்கா வெற்றியின்போது பதினாயிரம் தோழர்களுடன் மக்காவில் நுழையும்பொழுது தமது தலை ஒட்டகத்தின் சேணத்தைத் தொடும்படியாகத் தாழ்த்திக்கொண்டு சென்றனர்.

தோழர்களெல்லாம் பெருமானாரையே முன்மாதிரியாகக் கொண்டு எளிய வாழ்க்கை நடத்தினார்கள். அஸ்ஹாபுஸ்ஸுஃப்பா (Ashab-us-Suffa) என்ற நாயகத் தோழர்கள், மதினா பள்ளிவாசலில் வசித்தார்கள். பகலெல்லாம் பெருமானாருடன் இருப்பார்கள். இரவில் மஸ்ஜித் நபவீ என்ற பள்ளிவாசலில் தியானம் செய்வார்கள். அவர்கள் மிக மிக ஏழைகள். அவர்களுக்கு வீடு கிடையாது. ஒரு மேற்போர்வைதான் அவர்களுடைய சொத்து அரை வயிறு கஞ்சி குடித்து, அரை நிர்வாணமாயிருந்த இந்தத் தோழர்களை, வெயிலுக்கும் மழைக்கும் தாங்காத கூரையுள்ள அந்தப் பள்ளிவாசலில் உட்கார்ந்துகொண்டு வெற்றித் திட்டங்கள் தீட்டினார்கள்; வெற்றியும் பெற்றார்கள். பெருமானாரின் பயிற்சியின் பலனாக இவர்கள் வெற்றி வேந்தர்களாகவும், மாநில மன்னர்களாகவும், உள்ளங்களை வென்று இறைவன் பக்கம் மக்களை இழுக்கும் காந்த சக்திகளாகவும் திகழ்ந்து, இஸ்லாமிய வானிலே நட்சத்திரங்களாக ஒளி வீசிக்கொண்டு இருந்தார்கள்.

ஏழைகளுடனும் யாசகர்களுடனும் பெருமானார் உள்ளன்புடன் உட்காருவர். தமக்கெனத் தனியாக விரிப்போ, நாற்காலியோ, சிம்மாசனமோ வைத்துக் கொள்ளவிரும்பவில்லை. தோழர்களுடன் கலந்தே உட்காருவது வழக்கம். அந்தக் குழுவிலே, பெருமானார் யார் என்று அந்நியர் கண்டு கொள்ள முடியாது.

''யூனுஸ் நபியைவிட என்னைப் பெருமைப்படுத்தாதீர்! மூஸா நபியைவிட உயர்த்திப் பேசாதீர்!'' என்று தமது தோழர் குழாத்திற்குக் கட்டளையிடுவர்.

விருந்துக்கு அழைத்தவர் பணிமக்களாயினும் அவர்களது அழைப்பை அன்புடன் அண்ணல் நபி ஏற்றுக் கொள்வர்.

பெருமானாரின் பார்வை எப்பொழுதும் கீழ் நோக்கியே இருக்கும். கால்களை நீட்டி உட்காரும் வழக்கமில்லை. பெருமானாருடைய நாணமும், அடக்கமும் ஒரு கன்னிப் பெண்ணைவிட அதிகமானது.

பெருமானார், இவ்வுலகை விட்டுப் பிரியுமுன் மதீனா பள்ளிவாசலிலே இறுதியாக கூட்டுத்தொழுகை நடத்தி விட்டு, மக்களை நோக்கி, ''நான் உங்களுக்கு ஏதாவது துன்பம் செய்திருந்தால், இதோ என்மீது பதிலுக்குச் செய்து கொள்ளுங்கள் எந்த முஸ்லிமுடைய நல்ல பெயரை நான் கெடுத்திருந்தாலும். அம்மனிதன் எனது குற்றங்களை வெளிப்படையாகக் கூறட்டும். எவராயினும் என்னால் பொருள் இழந்திருந்தால் எனது பொருள் அவரது கடனுக்காகக் கொடுக்கப்படும்'' என்றனர்.

ஒரு முஸ்லிம் எழுந்து ''எனக்கு மூன்று காசு கொடுக்க வேண்டும்'' என்று கூறினர். பெருமானார் உடனே அந்தக் கடனைக் கொடுத்துவிட்டு, மறுஉலகில் வெட்கம் அடைவதைவிட இவ்வுலகில் வெட்கமடைதல் எனக்கு மேலானது என்றனர்.

பெருமானாரின் புதல்வர் இப்ராஹீம் இறந்த பொழுது, சூரிய கிரகணம் உண்டாயிற்று. அந்த மரணத்திற்காக வானுலகம் துக்கப்படுவதாக மக்கள் கூறினார்கள். உடனே, பெருமானார் மக்களை நோக்கி, ''சூரிய சந்திர கிரகணங்கள் மக்கள் பிறப்பதையும் இறப்பதையும் குறிப்பதில்லை'' என்றனர்.

நல்லொழுக்கத்துறையிலே பெரிய பெரிய நபிமார்களும் அடைந்திராத உன்னத நிலைமையை பெருமானார் அடைந்திருந்தனர்.

''இறைவன் மீதும் இறுதித் தீர்ப்புநாள் மீதும் நம்பிக்கை கொண்டு இறைவனை அதிகமாக நினைவில் வைப்போருக்கு மெய்யாகவே, அல்லாஹ்வின் தூதரிடத்தில் மேலான முன் மாதிரி இருக்கின்றது''
[குர் ஆன் 33 :21]

''(முஹம்மதே!) மெய்யாகவே, நீர் உயர்ந்த குணத்தில் இருக்கின்றீர்'' —[குர்ஆன் 68 : 4]

**எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து**

குருடரைக் கவர்னராக்கியது : மக்கா நகரச் சீமான் ஒருவருடன் ஒருநாள் பெருமானார் மதசம்பந்தமாகப் பேசிக்.கொண்டிருந்தனர். அப்பொழுது, அங்கு வந்த ஒரு குருடரைப் பெருமானார் கவனிக்காமல் புறக்கணித்தனர். மேலும், சீமானுடன் பேசிக்கொண்டிருக்கையில் அப்பேச்சிற்குத் தடையாயிருந்த குருடர் மீது கோபமும் கொண்டனர். அதனால், இறைவன் பெருமானாரைக் கண்டித்தான். ''அபஸ'' என்னும் குர்ஆன் அத்தியாயம் இறங்கியது. அதற்கப்பால், பெருமானார் அந்தக் குருடரைச் சந்திக்கும் பொழுதெல்லாம். அவருக்குத் தனி மரியாதை செய்வது வழக்கம் ''என் இறைவன் என்னைக் கண்டிக்கக் காரணமான இந்த மனிதரை முக்காலமும் வரவேற்பேன்'' என்பர், மேலும், அந்தக் குருடரை இரண்டுமுறை மதீனாவுக்கு கவர்னராக நியமித்தனர்,

அடிமைகளுடன் : ''நான் ஓர் அடிமை, அடிமையைப் போல் உணர்கிறேன், அடிமையைப்போல் உட்காருகிறேன்'' என்பது நபிமொழி.

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்**

அடிமை, எஜமான்; ஏழை, பணக்காரன்; இளைஞன்; முதியோன்; ஆண், பெண் என்ற சகலரையும் எம்பிரான் சமமாகவே கருதினர். பிலால், ஸல்மான், ஸுஹைப் என்போர் அடிமைகளாக இருந்தார்

கள். எனினும், பெரிய குரைஷ் தலைவர்களை மதித்த தைப்போலவே பெருமானார் இந்த அடிமைகளையும் மதித்தனர்.

ஜைத் (Zaid) என்னும் அடிமையைத் தளபதியாக வும், கருநிறமுள்ள பிலால் என்னும் அடிமையை தொழுகைக்கு அழைப்பவராகவும் நியமனஞ்செய் தனர். அப்பொழுதும், உயர்குலத்தவரான குரைஷ் கோத்திரத்தார் முணு முணுக்கவே இல்லை.

கருநிறத்தின் ஹபஷீயைக் காதல்மிகு பார்ஸியைப்
பெருஞ்செருக்கின் அரபியைப் பிணைத்தெடுத்த நாயகமே!

பிற மதஸ்தருடன்: ஒருநாள் தெருவில் ஒரு பிரேதம் கொண்டுபோகப்பட்டது. அதைக் கண்ட வுடன் எம்பிரான் எழுந்து நின்றனர். அதைக் கண்ட தோழர்கள், "இது ஒரு யூதனுடைய சவம்!" என்றார் கள். உடனே பெருமானார், "இறந்த மனிதனுக்கு ஆத்மா உண்டா இல்லையா?" என்று கேட்டனர்.

சமதர்மம்: தமக்கொன்றும் பிறர்க்கொன்று மாக எந்த நியதிகளையும் பெருமானார் வகுத்துக் கொள்ளவில்லை. நீதி என்பது அனைவர்க்கும் பொது என்பதை விளக்கி, "ஆண்டவன் ஆணையாக, என் மகள் பாத்திமா திருடும் குற்றஞ்செய்தாலும் அவ ளுடைய கைகளும் வெட்டப்படும்" என்று ஒரு சமயம் பெருமானார் அறிவித்தனர்.

இனச்செருக்கின்மை: ஜாதிச் செருக்கு, நிறப் பெருமை, செல்வச் செருக்கு கோத்திரக் கர்வம், தேசிய உயர்வு இவை அனைத்தையும் பெருமானார் தகர்த்தெறிந்தனர். அரபியரும் அரபியரல்லாதவரும் கருநிற அபிஸீனிய அடிமையும், வெண்ணிற அரபியரும் ஆண்டவனது சந்நிதானத்திலே சமமானவர்களே என்று விளம்பரப்படுத்தினர். ஒழுக்கமும் இறையச் சமுமே உயர்விற்கு உரைகல் என்று தீர்ப்பளித்தனர்.

தொழிலின் உயர்வு : தொழிலாளியின் வியர்வை உலரு முன்னர் அவனுக்குரிய கூலியைக் கொடுத்துவிட வேண்டும் என்பது உயர் நபியின் மணிமொழிகளில் ஒன்று. மதீனாவில் பள்ளிவாசல் கட்டும்பொழுது பெருமானார் சாதாரணக் கூலியைப்போல் மண்தோண்டி, கல் மண் சுமந்தனர். அகழ்ப் போரிலே, பெருமானாரும் அகழ் வெட்டினார்.

ஒரு சமயம் பெருமானார் தமது தோழர்களுடன் காட்டில் சென்றனர். அப்பொழுது சமையல் செய்வதில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலை செய்து பங்கெடுத்துக் கொண்டார்கள். பெருமானார் காட்டில் சென்று விறகு சேகரிக்கச் சென்றனர்.

இறை தூதராயிருந்தும், மன்னராயிருந்தும், பெருமானார் பாட்டாளியைப் போலவே வேலை செய்தார். தொழிலின் காரணமாக எவரையும் சிறியோர் பெரியோர் என்று பாகுபாடு செய்யலாகாது எனவும், இதற்கு மாறாக, ஒழுக்கமும் பக்தியுமே ஒருவனை உயர்ந்தோனாக்கும் எனவும் செயல் முறையில் விளக்கினர். அதனால்தான் முஸ்லிம்களுடைய கூட்டுத் தொழுகையில் அரசனும் அடிமையும் தோளோடு தோள்சேர்த்து, ஒரே வரிசையில் நின்று, அன்றும் இன்றும் தொழுகின்றார்கள்.

முகஸ்துதி கூடாது : பெருமானார் ஒருநாள் பள்ளிவாசலில் நுழையும்பொழுது அங்கு ஒருவர் தொழுது கொண்டிருந்தார். அவரைப் பற்றி பெருமானார் விசாரித்தனர். தோழர்களில் ஒருவரான முஸ்ஜின் தக்பீ என்பவர் அந்த மனிதரது பெயரைக் கூறினார். மேலும், அவரை அளவு கடந்து புகழ்ந்தார். பெருமானார் இந்த புகழுரையைக் கேட்டு, ''இது அவர் காதிலே விழாமல் இருக்கட்டும். இந்த புகழை அவர் கேட்பாரானால் அவர் நாசமாகி விடுவார்'' என்று கூறினார். ஏன்? தனது புகழையும் உயர்வையும் கேட்டவுடன் மனிதனுக்கு கர்வம் உண்டாகி விடும். இறுதியில் அந்தக் கர்வம் அவனுக்குக் கேடு விளைவிக்கும்.

**சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்**

எவரையும் பழிக்கலாகாது : தமது ஆயுள் முழுவதிலும் பெருமானார் ஒருவரையும் சபிக்கவில்லை. ஏசவுமில்லை, ஒருவருடைய குறைகளை எவராயினும் கூறினால், அதைப் பெருமானார் விரும்பியதில்லை. பிறரைப்பற்றிய தகாத வார்த்தைகள் கூறப்பட்டாலும் தமது முகத்தைத் திருப்பிக் கொள்வார்.

**ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.**

பிறர் குற்றத்தைப் போலவே தன் குற்றத்தையும் நோக்குவோன், புறங்கூறிப் பிறரைப் பழிக்கமாட்டான் அல்லவா?

ஏற்பது இகழ்ச்சி : அறஞ்செய்ய விரும்புவது மனித இயற்கை. என்றாலும் பிச்சை எடுக்கும் தொழில் மானமில்லாத இழிதொழில் என்று பெருமானார் போதித்தனர். கொடுக்கும் கையானது வாங்கும் கையைவிட மேலானது. வேலைசெய்ய மனமில்லாமல். உடல் நலத்துடன் இருப்பவன் பிச்சை எடுத்தால், அது அவனைத் தாழ்வடையச் செய்யும். எனவே, ஆயிரமாயிரம் பொற்காசுகளை அள்ளிக் கொடுக்கும் பண்புள்ள நபி நாயகம் பிச்சைத் தொழிலை இகழ்ந்தார்.

ஒரு நாள் ஒரு வாலிபன் பெருமானாரிடம் வந்து பிச்சை கேட்டான்.

பெருமானார் : உன் வீட்டில் ஏதாவது பொருள் இருக்கின்றதா?

வாலிபன் : ஓர் ஒட்டகத்தோல் இருக்கின்றது. அதை விரித்துப் படுக்கிறோம். ஒரு பாத்திரமும் இருக்கின்றது தண்ணீர் குடிக்க அதை உபயோகிக்கின்றோம். இந்த இரண்டும்தான் எங்கள் ஆஸ்தி.

பெருமானார் : வீடு சென்று, அந்த இரண்டு சாமான்களையும் என்னிடம் கொண்டுவா.

அந்த வாலிபன் சென்றான். சில நிமிடங்களில் இரண்டு சாமான்களையும் கொண்டுவந்தான்.

பெருமானார் : (தமது தோழர்களை நோக்கி) யாராயினும் இவற்றை விலைகொடுத்து வாங்குவீர்களா?

ஒரு தோழர் : நான் ஒரு திர்ஹம் (நாணயம்) கொடுக்கின்றேன்.

ஒரு தோழர் : நான் ஒரு திர்ஹம் (நாணயம்) கொடுக்கின்றேன்.

பெருமானார் : எவராயினும் அதிக விலை கொடுக்க முடியுமா?

இரண்டாம் தோழர் : நான் இரண்டு திர்ஹம் கொடுக்கின்றேன்.

அந்தத்தோழரிடம் இரண்டு திர்ஹம்பெற்று, பெருமானார் அதை அந்த வாலிபனிடம் கொடுத்து: ''வாலிபனே! இதில் ஒரு திர்ஹம் கொண்டுபோய் தானியம் வாங்கிக்கொள். அதைச் சமைத்து நீயும் உன் வீட்டாரும் சாப்பிடுங்கள். மற்றொரு திர்ஹம் கொண்டு போய், ஒரு கோடாரி வாங்கிக் கொண்டு என்னிடம் வா!'' என்று கூறினர்.

அந்த வாலிபன் அவ்வாறே செய்தான். கோடாரியுடன் பெருமானாரிடம் வந்தான். பெருமானார் அந்தக் கோடாரிக்குக் காம்பு தயாரித்துக் கொடுத்தனர். ''காட்டுக்குச் செல்.'' இந்தக் கோடரியால் காய்ந்த மரக்கிளைகளை வெட்டிக் கொண்டு வா. அவற்றைக் கடைத்தெருவில் விற்பனை செய். பதினைந்து நாட்கள் கழித்து என்னிடம் வா. உனக்கு எவ்வளவு இலாபம் கிடைத்ததென்று தெரிவி!'' என்றார்.

பதினைந்து நாட்கள் கழிந்தன. அந்த வாலிபன் பெருமானாரிடம் வந்தான். அவன் முகத்தில் தெளிவு இருந்தது. மகிழ்ச்சியுடன் ''நாயகமே! இந்தப் பதினைந்து நாட்களில்நான் பத்து திர்ஹம் சம்பாதித்தேன். அதில் உடுத்திக் கொள்ள ஆடையும் வாங்கினேன். நான் இன்பமாக இருக்கின்றேன். பிறரை நம்பிப் பிழைக்க வேண்டிய அவசியம் இனி எனக்கில்லை'' என்றான். இதைக்கேட்டுப் பெருமானார், ''எனக்கும் அளவு கடந்த மகிழ்ச்சி! முயற்சிக்குத் தகுந்த பலனை ஆண்டவன் கொடுக்கின்றான் என்பதை மறந்து விடாதே! பிச்சை கேட்போரை ஆண்டவன் விரும்புவதில்லை' என்று அவனுக்கு உபதேசம் செய்தனர்.

**கையேந்தும் செய்கையினும் காடுசென்று விறகுவெட்டி**
**மெய்யேந்தும் வாழ்வதனை மெச்சுகின்ற நாயகமே!**

உணவு : எளிய உணவே உண்பது பெருமானாரின் வழக்கம். சுத்தமான ஆகாரத்தை விரும்புபவர். தேன், சுரைக்காய், ஜைத்தூன் எண்ணெய் இவற்றை விருப்பத்துடன் சாப்பிடுவர் வெங்காயம் போன்ற துர்நாற்றமுள்ள உணவுப் பொருள்களில் விருப்பம் கிடையாது. சாப்பிடு முன்னரும், சாப்பிட்டபிறகும், கைகளை நன்றாகத் தேய்த்துக் கழுவிக்கொள்வது வழக்கம். தொழுகையில், இருப்பில் இருப்பது போலவே பெருமானார் சாப்பிடும்பொழுதும் உட்காருவது வழக்கம். சூடான ஆகாரம் சாப்பிடுவதில்லை. ''பிஸ்மில்லாஹ்!'' (ஆண்டவன் பெயரால்) என்று சொல்லிச் சாப்பிடுவர், மூன்று அல்லது நான்கு விரல்களால் சாப்பிடுவர். உமி கலந்த வாற்கோதுமை மாவால் சுடப்பட்ட ரொட்டியே எப்பொழுதும் சாப்பிடுவர் சாப்பிட்டு முடிந்தவுடன், 'அல்ஹம்துலில்லாஹ்!' (இறைவனுக்கு நன்றி)என்பர். மூன்று தடவை ''பிஸ்மில்லாஹ்'!' என்றுசொல்லித் தண்ணீர் குடிப்பார். தண்ணீர் குடிக்கும்பொழுது கொஞ்சம் கொஞ்சமாகக் குடிப்பது வழக்கம்.

 

தருமமாகக் கொடுக்கப்படுவதைச் சாப்பிடுவதில்லை. ஆனால், அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டதை ஏற்றுக் கொள்வர். ஒருநாள் பெருமானாரின் பேரன் இமாம் ஹஸன், தருமமாகக் கொடுக்கப்பட்ட பேரீச் சம்பழம் ஒன்றை வாயில் போட்டு விழுங்கிவிட்டார். பெருமானாருக்குத் தெரிந்தவுடன், ''தருமமாக வரும் பொருள்களை நமது குடும்பத்தார் சாப்பிடலாகாது என்று தெரியாதா?'' என்று கோபித்தனர். மேலும், பேரனுடைய தொண்டையில் தமது விரலை விட்டு வாந்தி எடுக்கும்படி செய்தனர்.

உடை: பெருமானாரின் உடை மிகவும் எளியது. ஒட்டுப் போட்ட துணியும், அழகான துணியும் ஒன்றாகவே மதித்து உடுத்திக்கொள்வர். ஆண்பாலர் பட்டாடையும் பொன் ஆபரணமும் அணியக்கூடாது என்பர். சுத்தமான ஆடையே விரும்புவர். சிவப்பு ஆடையை விரும்புவதில்லை. வெள்ளையே நல்ல ஆடை என்பர். உடல் மறையும்படி ஆடை அணிவது வழக்கம்.

உறைவிடம்: மண் சுவர்களால் கட்டப்பட்டு, மண் மேல் தளமுள்ள சிறிய அறைகளிலே பெருமானார் வசித்தனர். பெருமானார் வசித்த அறையில் ஒரு படுக்கையும், ஒரு தண்ணீர் கூஜாவும் இருந்தன. பலநாட்கள். தொடர்ச்சியாக வீட்டில் பேரீச்சம்பழமும் தண்ணீருந் தவிர வேறு ஆகாரம் கிடையாது.

படுக்கை: பெருமானார் அரேபியாவின் அதிபதி. அன்னாரிடம் ஏராளமான செல்வம் வந்து குவிந்து கொண்டிருந்தது. ஆனால், பெருமானாரது இல்லமும் அன்னமும் ஆடையும் மிக எளிய முறையில் அமைந்திருந்தன. ஒரு தோல், அல்லது நாரினால் பின்னப்பட்ட பாய் அல்லது கோணிச் சாக்கு இவையே பெருமானாரின் படுக்கையாக உபயோகிக்கப்பட்டன.

பெருமானாரின் மனைவியார் ஹப்ஸா (Hafza) என்பவர் வழக்கமாக இரண்டாக மடிக்கும் சாக்கை நான்காக மடித்துப் படுக்கை அமைத்தார். மறுநாள்

காலையிலே பெருமானார், ''அவ்வாறு செய்யலாகாது'' என்று கூறினர். ''இனிமேல் வழக்கம்போல் விரிப்பாயாக! ஏனென்றால், விரிப்பு மெதுவாகயிருந்தால் இரவில் தொழுகைக்காக எழுந்திருப்பதற்குத் தடையாகிறது'' என்றனர்.

சுத்தம் : பெருமானார் உள்ளும் புறமும் தூய்மையை விரும்புவர். உடையும் உறைவிடமும், ஊணும் சுத்தமாக வைத்துக்கொள்வர். தினந்தோறும் குளிப்பது வழக்கம். ஒரு நாளில் பல தடவைகளில் பல்விளக்குவர். தலைமயிரையும் தாடியையும் சீப்பினால் சுத்தம் செய்வர். வாசனைத் திரவியங்களையும் உபயோகிப்பதுண்டு.

குடும்ப வாழ்க்கை ; பெருமானாரின் மனைவி கதீஜா பிராட்டியார் காலஞ்சென்ற பிறகு, அந்த அம்மையாரைப் பெருமானார் எப்பொழுதும் நினைப்பதுண்டு. உலகெலாம் பெருமானாரை ஏற்றுக் கொள்ளாமல் இருந்தபொழுது கதீஜா பிராட்டியார் ஒருவரே எம்பிரானைப் புகழ்ந்தார். போற்றினார். முதலாவதாக இஸ்லாத்தை ஒப்புக்கொண்டார். பெருமானாரின் நபித்துவத்தில் முழு நம்பிக்கை கொண்டார். தமது பணத்தாலும் செல்வாக்காலும் பெருமானாருக்கு உதவி செய்தார். ஆகையால், அந்த அம்மையாரை அடிக்கடி நினைப்பது பெருமானாரின் வழக்கம். கதீஜா பிராட்டியின் நண்பர்களுக்கு பெருமானாரிடமிருந்து அடிக்கடி அன்பளிப்புகள் வரும். ''உலகெலாம் என்னை நம்பாத வேளையிலே, கதீஜா என்னை நம்பி முஸ்லிமானார்! என்று நபிநாயகம் நினைவு கூறுவார்.

பலதாரமணமுள்ள அக்காலத்திலேய பெருமானார் தங்கள்மனைவியருடன் நீதியுடன் நடந்தார்கள். வீட்டு வேலையில் மனைவியருக்கு உதவி செய்வார். தங்கள் புதல்வி பாத்திமா நாயகியின் வீட்டுக்கு அடிக்கடி செல்வர். வெளியூரிலிருந்து வந்தால் பள்ளி வாசலுக்குச் சென்று தொழுதுவிட்டுப் புதல்வி

வீட்டுக்கு முதலில் செல்வர். புதல்வி தமது வீட்டுக்கு வந்தால் எழுந்து வரவேற்று நெற்றியில் முத்தமிடுவர். புதல்வியின் குழந்தைகளைத் தோள்மீது சுமந்து செல்வர். அவர்களுடன் வெகுநேரம் விளையாடிக் கொண்டிருப்பர்.

பெண்மை: உலக வரலாற்றிலேயே முதலாவதாகப் பெண்மைக்கு உயர்வு கொடுத்தவர் நபிகள் நாயகமே பெண்ணைப் பைசாசம் என்று கருதிய அரபியா நாட்டிலே, அவர்களுக்குச் சொத்துரிமை, விவாக விலக்குரிமை கொடுத்தனர்.

''மாதாவின் காலடியில் சுவர்க்கம் இருக்கின்றது'' என்பது நபிமொழி. ''ஆண்பாலரின் உடையே பெண்பாலர்'' என்று குர்ஆன் கூறுகிறது. பெண்களுக்கு ஆண்களுடன் சம உரிமை அளித்தனர். பெண்கள் தம்மைப் பேட்டி காண்பதற்காக வாரத்தில் ஒரு நாளை ஒதுக்கிவைத்தனர்.

உயர்ந்த ஆத்ம நிலை அடைவதற்குச் சந்நியாசம் அவசியமில்லை. உலக மக்களிடையில் வசித்துத் தன் குடும்பம், சுற்றம், ஊர், மாவட்டம், நாடு, உலகம் என்ற நிலையில் தனது அன்பையும் சேவையையும் பெருக்கவேண்டும். நாம் எந்த நிலையில் இருந்தாலும், இறைவனுடைய பார்வை நம்மீது இருக்கின்றது என்று உணர்ந்து நடக்கவேண்டும். அளவு கடந்து நோம்பு நோற்றலும், உலகப்பற்றை விடலும் உயர்ந்த ஆத்ம நிலை ஆகாது. மக்களுக்குப் பணியாற்றிக்கொண்டே, இவ்வாறு செய்தலே உயர்ந்த ஆத்ம நிலை என்று பெருமானார் கூறினர்.

அன்பர்பணி செய்யஎன்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே

குழந்தைகளிடம்: ''தங்கள் குழந்தைகளிடம் உள்ளன்பு கொண்டு அக்குழந்தைகளுக்குச் செய்ய

வேண்டிய கடமைகளைச் செய்வோர் நரகத்தின் நெருப்பிலிருந்து காப்பாற்றப்படுவார்கள்.''

—நபிமொழி.

பெருமானார் தமது குழந்தைகளிடமும் பிறர் குழந்தைகளிடமும் அன்பாயிருப்பர். அடிமைகளுடைய குழந்தைகளையும் பேசிப்பர். குறிப்பாகப் பெண் குழந்தைகளை நேசிப்பர். எல்லோரும் பெண் குழந்தைகளிடம் நேசபாயிருக்க வேண்டுமென்றும் போதிப்பர். ''குழந்தைகளை நேசிக்காதோரும், அவர்களிடம் இரக்கம் கொள்ளாதோரும் முஸ்லிம்கள் அல்லர்'' என்பது நபிமொழி.

குழந்தைகளைக் கண்டால் புன்சிரிப்புடன் சந்திப்பர். அவர்களுடன் அன்பு கலந்த வார்த்தையாடுவர். பெருமானார் மதுரமொழிகள் அக்குழந்தைகளுக்கு வெகு இனிமையாக இருக்கும். பெருமானாரைக் கண்டவுடன் குழந்தைகள் ஓடி வருவார்கள். அவர்களைக் கண்டவுடன் பெருமானார், ''அஸ்ஸலாமு அலைக்கும்!'' என்பர். அவர்களுடன் அன்பாகப் பேசி நெற்றியில் முத்தமிடுவர், நண்பர்களுடைய குழந்தைகளைக் கண்டால் சொந்தப் பிள்ளையைப்போல் தூக்கிக்கொள்வர். குழந்தைகள் தமது ஆடைகளை அழுக்காக்கினாலும் பொறுமையுடன் இருப்பர். பழங்கள் வெகுமதியாக வந்தால், முதலாவதாகக் குழந்தைகளுக்கே கொடுப்பர். பிரயாணத்திலிருந்து திரும்பி வரும்பொழுது குழந்தைகளைக் கண்டால் அவர்களைத் தூக்கித் தமது ஒட்டகத்தின்மீது உட்கார வைப்பது பெருமானாரின் வழக்கம். தொழுகை நேரத்திலே, பள்ளிவாசலிலே அதிக எண்ணிக்கையில் குழந்தைகள் வந்திருக்கக் கண்டால், அந்தக் கூட்டுத்தொழுகை நேரத்தைப் பெருமானார் குறைத்துக் கொள்வர்.

ஜைத் பின் ஹாரிஸ் என்பவர் முதலில் அடிமையாயிருந்தார். அவரைப் பெருமானார் தமது சொந்தப் பிள்ளையைப் போலவே நேசித்தனர். இவ்வாறு பல ஆண்டுகள் கழிந்தன. ஜைதுடைய தகப்பனார்,

அவரைத் தமது ஊருக்கு அழைத்துக் கொண்டுபோக வந்தார். அப்பொழுது, ''என் பெற்றோரைவிட பெருமானார் என்னை அதிகமாக நேசிக்கின்றார்கள். ஆகையால் நான் வரமாட்டேன்'' எனக் கூறித் தமது பெற்றோருடன் செல்ல அவர் மறுத்துவிட்டார்.

ஒருநாள் ஒரு காட்டரபி பெருமானாரிடம் வந்திருந்தான். அப்பொழுது, பெருமானார் ஒரு குழந்தையோடு அன்பாகப் பேசிக்கொண்டிருக்கக் கண்டான். இதைக் கண்டு அந்த மனிதன் ஆச்சரியப்பட்டு, ''எனக்குப் பத்து குழந்தைகள் இருக்கின்றன. ஆனால், அவர்களில் ஒருவரையும் நான் நேசிப்பதில்லை'' என்றான். உடனே, பெருமானார், ''ஆண்டவன் உமது உள்ளத்திலிருந்து அன்பை நீக்கிவிட்டால் நான் என்ன செய்வேன்'' என்று மறுமொழி கூறினர்.

தமது பேரர்களான ஹஸன், ஹுஸைன் என்ற இருவரையும் பெருமானார் அதிகமாக நேசித்தனர். ஒரு சமயம் அவ்விருவரையும் தோள்மீது சுமந்து கொண்டு பள்ளிவாசலுக்கு வந்தனர். அவ்விருவரையும் பக்கத்தில் உட்கார வைத்துவிட்டுத் தொழுதனர். தமது புதல்வி பாத்திமா நாயகியின் வீட்டிற்குச் சென்றால், ''என்னிடம் குழந்தைகளைக் கொண்டு வாருங்கள்'' என்று முதலாவதாகக் கூறுவர். வெகு நேரம் அக்குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பர்.

முஸ்லிமாயினும், முஸ்லிமல்லாதாராயினும் எல்லாக் குழந்தைகளையும் ஒன்றாகவே பெருமானார் நேசிப்பது வழக்கம்.

ஒரு போரில் குழந்தைகள் கொல்லப்பட்டதாக ஒரு நாள் பெருமானாரிடம் கூறப்பட்டது. பெருமானார் அதிக துக்கமடைந்தனர். ''அவை முஸ்லிமல்லாத குழந்தைகள்'' என்றார் ஒருவர். பெருமானார் கோபங் கொண்டு, ''குழந்தைகள் குழந்தைகள் தாமே! யாருடைய குழந்தையாக இருந்தாலென்ன?'' என்றனர்.

குழந்தைகளுக்குத் தண்டனை இடுவதைப் பெருமானார் விரும்புவதில்லை. பாலூட்டித் தாலாட்டினால் மட்டும் போதாது. குழந்தைகளிடம் அன்பாயிருக்க வேண்டும். ஒரு செடிக்குச் சூரிய வெளிச்சம் எவ்வளவு அவசியமோ அதைப்போல, ஒரு குழந்தைக்கு அன்பும் தேவை என்று கூறுவர்.

அனாதைக் குழந்தைகள் : பெருமானார் தமது குழந்தைப்பருவத்திலே, தகப்பனாரையும் தாயாரையும் இழந்து அனாதையாகிவிட்டாரல்லவா? எனவே, அனாதைக் குழந்தைகளிடம் பெருமானாருக்குத் தனிப்பட்ட அன்புண்டு.

''இரண்டு விரல்கள் எவ்வாறு நெருங்கி இருக்கின்றனவோ, அதைப்போன்றே நானும் குழந்தைகளைக் காப்பாற்றுவோனும் மறு உலகில் ஒரே இடத்தில் இருப்போம்'' —நபிமொழி.

''அனாதைக் குழந்தையைப் பாதுகாக்கும் வீடே மேலான முஸ்லிமுடைய வீடு.'' —நபிமொழி.

ஒருநாள் பெருமானார் தமது பேரர் ஹுஸைனுக்கு முத்தம் கொடுத்தனர் அச்சமயம் ஒரு காட்டரபி, அதைப் பார்த்துக் கொண்டிருந்தான். ''நாயகமே! எனக்குப் பத்து குழந்தைகள் இருக்கின்றன. ஆனால் இன்று வரை அவர்களில் எந்தக் குழந்தைக்கும் நான் முத்தம் கொடுத்ததில்லை'' என்று கூறினான். அந்த மனிதனுடைய சொற்கள் பெருமானாருக்கு வியப்பை உண்டாக்கின-உடனே, ''அன்பு காட்டாதவர் அன்பு காட்டப்படவும் மாட்டார்'' என்று அந்த மனிதனுக்கு அறிவித்தனர்.

அன்றொரு நாள் ஈத்பெரு நாள், மக்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். புத்தாடை புனைந்து, உண்டு, களித்து தொழுவதற்காக ஈத்காவை நோக்கி உல்லாசமாகச் செல்லும் காட்சி. ஆனால், அந்த ஆனந்தக்

கடலிலே ஒரு குறை! சிறுவனொருவன் தனியாக நிற்கின்றான்! கண்ணீர் வடிக்கின்றான்! பெருமூச்சு விடுகின்றான்! விம்முகின்றான்! ஆனால், அவனைக் கவனிப்பார் யாருமிலர். அச்சமயம் கருணைக்கடலான நபி நாயகம் அந்தவழியாக வந்தனர். சிறுவனைக் கண்டனர். அவனிடம் சென்று, அன்புடன் விசாரித்தனர்.

''எனக்குத் தந்தையில்லை! எல்லாப்பிள்ளைகளையும் அவரவர் தந்தையர் தொழுகைக்கு அழைத்துக் கொண்டு போகிறார்களே! என்னை அழைப்பார் ஒருவருமில்லை!'' என்றான் அச்சிறுவன். அந்த அனாதையின் குரலைக் கேட்டனர் பெருமானார் கண்ணீர் வடித்தனர். அந்த பையனைத் தூக்கி, அணைத்து, அவனை ஊரார் அனைவரும் பண்டிகை நாட்களில் கூட்டாகத் தொழும் ஈத்காவுக்குக் கொண்டு சென்றனர்.

**தெருவிடையே பெருநாளில் தேம்பியழும் அனாதையினை**
**அருமையுடன் அணைத்துவந்து அலங்கரித்த நாயகமே!**

ஏழைகளுக்கு உதவி : பெருமானார் ஏழைகளுக்கு உதவி செய்யும்பொழுது அவர்கள் தாம் ஏழைகள் என்று வெட்கப்படாத முறையில் உதவி செய்வர் அவர்களை சந்தோஷப்படுத்துவர். அவர்களுக்காக இறைவனிடம் பிரார்த்தனை செய்வர். ''இறைவா! என்னை ஏழையாக வைப்பாயாக! என்னை மறு உலகில் ஏழையாக எழுப்புவாயாக! என்று பிரார்த்திப்பர்.

ஒரு சமயம், ஒரு கோத்திரத்தார் அனைவரும் பெருமானாரிடம் வந்தார்கள். அவர்கள் எல்லோரும் பரம ஏழைகள். அவர்களுடைய உடலை மறைக்க அவர்களிடம் நல்ல ஆடையும் இல்லை அவர்களது நிர்வாண நிலையையும், அவர்கள் பாதரட்சை இல்லாமல் இருப்பதையும் கண்டு பெருமானாருக்கு மனவேதனை உண்டாயிற்று. தாமே அவர்களுக்கு உதவிசெய்து ஒவ்வொருவரையும் திருப்தி செய்யமுடியாத நிலைமையில் இருந்தனர். வீட்டிற்குள் செல்வதும் அங்

கிருந்து வெளியே வருவதுமாக மனவேதனையில் இருந்தனர். பிறகு, எல்லா முஸ்லிம்களையும் அழைத்தனர். ''இந்த ஏழைகளுக்கு உதவி செய்யுங்கள்'' என்று அவர்களைக் கேட்டுக்கொண்டனர்.

நோயாளிகள் : யாராவது உடல் நலமில்லாமல் இருந்தால், பெருமானார் அவரிடம் சென்று விசாரிப்பது வழக்கம். மேலும், நோயாளி குணமடைய வேண்டுமென்று ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்வர். உடல் நலம் குன்றியோருக்காகப் பிரார்த்தனை செய்ததைப் போலவே, மன வியாதியுள்ளோருக்காகவும் பெருமானார் பிரார்த்தனை செய்வது வழக்கம், இறைவனை நிராகரித்தோருக்காகப் பெருமானார் செய்த பிரார்த்தனைகள் ஒன்று இரண்டல்ல. இதைப்போல, ஆத்ம வியாதியுள்ளோருக்காகவும் பெருமானார் இறைவனிடம் மன்றுடிப் பிரார்த்திப்பது வழக்கம்.

பிராணிகள் : கால்நடைகள், பறவை ஊர்வன, நீர்வாழ்வன முதலிய எல்லா உயிர்களிடமும் பெருமானார் அன்பாயிருப்பர். ஒரு சமயம் ஒருவர் ஒரு பறவையின் கூட்டிலிருந்து ஒரு குஞ்சை எடுத்துக் கொண்டு வந்தார். பறவைக் குஞ்சு தாய்ப் பறவையை விட்டுப் பிரிந்தது. இந்தச் செயலை அறிந்தவுடன் பெருமானார் அந்த மனிதனை, ''பறவைக் குஞ்சை அதன் தாயிடம் விட்டு வருவீராக!'' என்று கேட்டுக் கொண்டனர்.

ஒரு பெண்ணிடம் ஒரு பூனை இருந்தது. அவள் அந்தப் பூனையை எப்பொழுதும் கட்டி வைப்பாள். பட்டினி போடுவாள். அந்தப் பெண் இறந்தபின் நரகத்தில் வேதனைப் படுகிருள் என்று பெருமானார் கூறினர்.

ஒரு மனிதர் பாலைவனத்தில் சென்று கொண்டிருந்தார். அவர் செல்லும் வழியில், ஒரு கிணறு இருந்தது. அதன் பக்கத்தில் ஒரு நாய் நின்று கொண்டிருந்தது.

 

நாயோ அடக்க முடியாத தாகத்துடனிருந்தது. கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்கப் பாத்திரம் ஒன்றும் கிடைக்கவில்லை. அந்த மனிதன் நாயின் தாகத்தைத் தீர்க்க விரும்பினுர். தமது ஆடையைக் கிணற்றில் விட்டு நனைத்தார். அதை எடுத்து, துணியைப்பிழிந்து தண்ணீரை நாயின் வாயில் ஊற்றினுர். அந்த மனிதன் அந்த நாய்க்கு உதவி செய்தமையால் இறந்தபிறகு சுவர்க்கத்திற்கு உரியோன் என்று பெருமாஞர்கூறினர்.

விருந்தோம்பல் : விருந்தினருடன் உட்கார்ந்து சாப்பிடுவதே பெருமாஞருக்கு விருப்பம். இதில் முஸ்லிம், முஸ்லிமுல்லாதார் என்ற வேறுபாடு கிடையாது. கிறிஸ்தவர், யூதர், பல தெய்வ வணக்கத்தார் முதலிய எல்லோரும் விருந்தாளிகளே. அபிஸீனியாவிலிருந்து வந்த தூதர்களையும், கிறிஸ்தவத் தூது கோஷ்டியாரையும், மதீனு பள்ளிவாசலில் தங்கவும், கிறிஸ்தவமத முறைப்படி ஜெபம் செய்யவும் இடம் கொடுக்கப்பட்டது. அவர்களைப் பெருமாஞர் தமது வீட்டிலேயே விருந்தினராக வைத்திருந்தனர்.

உதவி கேட்டு வருவோருக்கு இல்லை என்று சொல்லும் வழக்கம் பெருமாஞரிடம் கிடையாது. சிலசமயம் பெருமாஞர் விருந்தாளிகளுக்கும் ஏழைகளுக்கும் அன்னம் கொடுத்து விட்டுத் தாம் பட்டினியாக இருந்து விடுவர்.

வள்ளல் நபி : பெருமாஞர் பெருவள்ளல். தமக்கு ஒரு பொருள் மிகத் தேவையாயிருந்த போதிலும் அதைப் பிறர் விரும்பினுல், முழு மனத்துடன் திரும்பிக் கொடுத்து விடுவர். அரபியா நாட்டிலே ஒவ்வொருவரும் அதிகமாக விரும்பும் செல்வம் தோட்டங்களே. ஒரு சமயம் ஏழு பெரிய அழகான தோட்டங்கள் பெருமாஞருக்குக் கிடைத்தன. ஆனுல், அவற்றைத் தருமத்திற்காக, அதாவது, ஏழைகளின் உதவிக்காகக் கொடுத்து விட்டனர்.

ஒரு நாள் கப்பார் (Ghaffar) கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவர் பெருமானாரைச் சந்திக்க வந்தார். அன்று பெருமானார் வீட்டில் உணவே இல்லை. கொஞ்சம் பால் இருந்தது. அன்று அந்தப்பாலை விருந்தாளிக்கு கொடுத்துவிட்டுப் பெருமானார் பட்டினியாகப் படுத்துக் கொண்டனர்.

மற்றொரு நாள், ஒரு தோழருக்குத் திருமணம் நடக்க வேண்டிருந்தது. அவர் மிகவும் ஏழை, நண்பர்களுக்கு விருந்தளிக்க அவரிடம் ஒன்றுமில்லை. அவர் பெருமானாரிடம் வந்து உதவி கேட்டார். அன்று, பெருமானார் வீட்டில் ஒரே ஒரு கூடை மாவு இருந்தது. உடனே, அந்த நண்பருக்கு அந்த மாவுக் கூடையைக் கொடுத்துவிட்டுப் பட்டினியாக இருந்தனர்.

இன்னொரு நாள், ஒரு மாது அழகான மேலாடையொன்றைப் பெருமானாருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தாள். அச்சமயம், அது பெருமானாருக்கு மிகவும் அவசியமாயிருந்தது. ஆகையால், அதைப் பெற்றுக் கொண்டனர். பக்கத்தில் நின்ற ஒரு மனிதர் அதைக் கண்டு, ''எவ்வளவு அழகான ஆடை!'' என்றார். அந்த மனிதனுக்கு அந்த ஆடை தேவை என்று நினைத்துப் பெருமானார் உடனே அதை அவருக்குக் கொடுத்துவிட்டனர்.

அண்டை வீட்டார் பணி : தமது வீட்டு வேலைகளைத் தாமே செய்யப் பெருமானார் தயங்குவதில்லை. கடைக்குச்சென்று சாமான்கள் வாங்கி வருவர். கடைக்குப் போகும்பொழுது பக்கத்து வீடுகளுக்குச் சென்று விசாரித்து அவர்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்கிக் கொண்டு வருவது வழக்கம். சாமான்களுடைய விலைகளை நன்கு விசாரித்துச் சிக்கனமாக வாங்கி, அவரவர் பொருளை அவரவர் வீடுகளில் சேர்த்து விடுவர். இதைத் தவிர, பக்கத்து வீட்டாரது கஷ்டகாலத்திலும், அவர்கள் வியாதியஸ்தராயிருக்கையிலும், அவர்களிடம் சென்று விசாரிப்பார். மருந்து முதலியன கொண்டு வந்து கொடுப்பர். தம்மைப்போலவே பிறரையும் நேசிப்பார்.

சமுதாய ஒழுக்கம் : பிறரைச் சந்திக்கும்பொழுது பெருமானாரே முதலாவதாக ஸலாம் சொல்வர். பெருமானாரிடம் எவராயினும் வந்து காதில் பேசினால், அந்தப் பேச்சு முடியும் வரை பெருமானார் பொறுமை யுடன் கேட்பார்.

எவரையாயினும் பெருமானார் சந்திக்கச்சென்றால், அந்த வீட்டின் வெளிவாயிலின் கதவோரத்தில் ஒதுங்கி நின்று கொண்டு, ஸலாம் சொல்லி, உள்ளே செல்ல அனுமதி கேட்பது வழக்கம். வீட்டிலிருந்து பதில் ஸலாம் வராவிட்டால் உடனே திரும்பிவிடுவர்.

மக்களுடன் சேர்ந்து உட்காரும்பொழுதும் உயர்ந் ததும் சிறந்ததுமான இடத்தில் உட்காருவதில்லை. பிறர் பேசிக்கொண்டிருக்கையில், அதை தடுத்துத்தாம் பேச முற்படுவதுமில்லை. எவராயினும், உள்ளத்தைப் புண்படுத்தும் வார்த்தைகளைப் பேசினால், அவற்றில் கவனம் செலுத்துவதேயில்லை. நல்ல சம்பாஷணையில் பங்கெடுத்து கொள்வர். அனாவசியமான, இழிவான பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்வதுமில்லை. பெரி யோருக்கும் கோத்திரத் தலைவர்களுக்கும் மரியாதை செய்வர். தம்மைச் சந்திக்க வருவோரது தேவைகளை தாமாகவும், தமது தோழர்கள் மூலமாகவும் விசாரித் தறிந்து எல்லோருக்கும் உதவி செய்வர். வந்தவர்களை மலர்ந்த முகத்துடன் சந்தித்துத் தாராளமாக பேசுவர். வந்தோரின் நலத்தை விசாரித்து அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்வர்.

எந்த மதத்தோராயினும், எத்தகையக் கொள்கை உடையோராயினும் தம்மிடம் வந்தோரை அன் புடன் உபசரித்தல் பெருமானாரின் இயற்கையாகும். ''பிறர் மனதைப் புண்ணாக்குவதைவிட, அவர்களது உள்ளங்களைக் களிக்கச் செய்தலே மேல்'' என்பர். பலவந்தத்தின் மூலமாக உலகத்தையே வென்றுவிட லாம். ஆனால், உள்ளங்களை அன்பினால்தானே வெல்ல முடியும்!

**அன்பளிப்பு :** தோழர்களுக்கு அன்பளிப்புக்கள் அனுப்புதலும் பெருமானாரின் பண்பு நலன்களில் ஒன்றாகும். பெருமானாரும் அன்பளிப்புகளைப் பிறருக்கு அனுப்புவர். பிறர் அனுப்பியதையும் பெற்றுக் கொள்வர். 'அன்பளிப்புகளை ஒருவர் மற்றொருவருக்கு அனுப்புங்கள். இது உங்கள் அன்பை வளர்க்கும்'' என்பர். ஸிரியா, எகிப்து, ரோமராஜ்யம், எமன் முதலிய நாட்டு மன்னர்கள் பெருமானாருக்கு அன்பளிப்புகள் அனுப்பினார்கள். அவர்களுக்குப் பெருமானாரும் அன்பளிப்புகள் அனுப்பினர். ஆனால், தர்மமாகக் கொடுக்கப்பட்ட பொருளைப் புசித்ததில்லை. அதைத் நமது குடும்பத்தாரையும் புசிக்க அனுமதிப்பதில்லை.

**காலந்தவருமை :** ஐங்காலப் பிரார்த்தனை, தஹஜ்ஜுத் என்ற நடுநிசிக்குப் பிறகு தொழும் தொழுகை, சாப்பிடல், தூக்கம்—முதலிய ஒவ்வொரு வேலையையும் குறித்த காலத்தில் தாமதமில்லாமல் பெருமானார் செய்து முடிப்பது வழக்கமாயிருந்தது.

**குப்பை கொட்டிய கிழவி :** பெருமானார் அதிகாலையில் தொழுகைக்காகச் செல்லும்பொழுது ஒரு கிழவி தன் வீட்டுக் குப்பை, சாம்பல் முதலிய அசுத்தங்களைப் பெருமானார் மீது வீசுவாள். இவ்வாறு தினந்தோறும் செய்வாள். எனினும், பெருமானார் பொறுமையுடன் குப்பையை உதறிவிட்டுச் சென்று விடுவர். ஒருசமயம் தொடர்ச்சியாக மூன்று நாள் வரை அந்தக் கிழவி அவ்வாறு செய்யவில்லை. பெருமானார் இதைப்பற்றி விசாரித்தனர். கிழவி உடல் நலமில்லாமல் படுக்கையில் இருப்பதாகத் தெரிந்தது. உடனே பெருமானார் அவள் வீட்டிற்குச் சென்றனர். அவளது உடல் நலத்தை விசாரித்தனர். அவளுடைய சுகத்திற்காக ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்தனர். சில நாட்கள் சென்றன. கிழவி குணமடைந்தாள். பெருமானாரிடம் வந்தாள். மன்னிப்புக் கேட்டாள். இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக்கொண்டாள்,

நகைச்சுவை : திருநபியின் வாழ்க்கையிலே இளைப் பாறவும், உல்லாசப் பொழுது போக்கவும், நகைப்பாக பேசவும் அவகாசம் ஏது? என்றாலும், மக்களுக்கோர் முன் மாதிரியாக வந்தமையால், நபி நாயகத்தின் நகைச்சுவையிலும் அன்னாரது வாழ்க்கையில் நமக்கு உதாரணங்கள் இல்லாமல் போகவில்லை. பெருமானார் தமது நண்பர்களுடன் உல்லாசமாகப் பந்தய ஓட்டங் களில் கலந்து கொள்வார்கள். சில சமயம் மக்களுக்கு உற்சாகம் உண்டாக்க தமாஷாகவும் ஹாஸ்யமாகவும் பேசுவர்.

நபி பிரான் மக்காவிலிருந்து இடம் பெயர்ந்து மதீனாவுக்குச் சென்றார்களல்லவா? மதீனா நகரில் பிரவேசிக்குமுன் பக்கத்திலுள்ள குபா (Quba) என்னும் சிற்றூரில் சில நாள் தங்கியிருந்தனர். அச்சமயம், ஹஸ்ரத் ஸுஹைப் என்ற தோழரும், மக்காவில் தமது சொத்துக்களையெல்லாம் விட்டு விட்டுப் பெருமானா ரிடம் வந்து சேர்ந்து கொண்டார். அவர் குபாவில் பெருமானாரைச் சந்திக்கும்பொழுது பெருமானார் பேரீச்சம் பழங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். வந்தவரும் உட்கார்ந்தார். இருவரும் சாப்பிட்டார் கள். ஹஸ்ரத் ஸுஹைபுக்கு அச்சமயம் கண் நோய் இருந்தது. பெருமானார் அதைக் குறிப்பிட்டு, ''உமது கண்ணில் நோய் இருக்கிற பொழுது நீர் எவ்வாறு பேரீச்சம் பழம் சாப்பிடுகின்றீர்?'' எனக் கேலியாகக் கேட்டனர். உடனே, ஹஸ்ரத் ஸுஹைப் அதே நகைச்சுவையுடன், ''இந்த நோயில்லாத கண்ணின் உதவியாலல்லவா நான் இந்தப் பழங்களைப் புசிக் கின்றேன்'' என்று மறுமொழி கூறினார்.

ஒரு நாள், ஒரு கிழவி பெருமானாரிடம் வந்து, ''நாயகமே! எனக்கு சுவர்க்கம் கிடைக்கும்படி இறை வனிடம் பிரார்த்தியுங்கள்!'' எனக் கேட்டுக் கொண் டாள். அதற்கு ''கிழவிகள் சுவர்க்கத்தில் பிரவேசிக்க மாட்டார்கள்'' எனப் பெருமானார் கூறினர். சுவர்க்க வாசம் தனக்கில்லை என்று கேட்ட கிழவிக்கு அதிக துக்க முண்டாயிற்று. கிழவிகள் ஏன் சுவர்க்கத்திற்குச் செல்ல

முடியாது?'' என்று தொடர்ந்து மற்றொரு கேள்வி கேட்டாள் அந்தக் கிழவி. உடனே, பெருமானார் ''பெண்களெல்லாம் சுவர்க்கத்தில் இளம் மங்கையராகவே பிரவேசிக்கும்படி ஆண்டவன் செய்வான்'' என்று குர்ஆனில் இருப்பது தெரியாதா? கிழவிகள் அங்கு எவ்வாறு செலல முடியும்?'' என்று பெருமானார் நகைச்சுவையுடன் கூறினர்.

தங்கள் தோழர்களுக்கும் வேடிக்கையான பெயர் சூட்டி அழைப்பதும் உண்டு. ஹஸ்ரத் அலீ ஒரு நாள் பள்ளிவாசலில் மண்மீது படுத்திருக்கக் கண்டு அவருக்கு ''அபூ துரப்! மண்ணின் தந்தை'' என்று பெயரிட்டனர் இன்னொரு தோழர் ''அபூ ஹுரைரு!-பூனையின் தகப்பன்!'' என்றழைக்கப்பட்டார்.

ஒரு நாள் பெருமானாரும் ஹஸ்ரத் அலீயும் பேரீச்சம் பழங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் இருவரும் நகைச் சுவையுடன் உரையாடிய நிகழ்ச்சியும் உண்டு.

ஒரு நாள் ஒருவர் பெருமானாரிடம் வந்து ஒரு (சவாரி) வாகனம் கேட்டார். பெருமானார் அவரிடம் ஓர் ''ஒட்டகக் குட்டியை உமது சவாரிக்காக நான் கொடுப்பேன்'' என்று கூறினர். அந்த மனிதர் ஏமாற்ற மடைந்தவரைப் போன்று, ''நாயகமே! எனக்கு ஒட்டகக் குட்டி வேண்டாம். ஒட்டகக் குட்டியால் எனக்கு என்ன பிரயோஜனம்? என்று அதிருப்தியுடன் கூறினார். பெருமானார், புன் சிரிப்புடன் ''ஒட்டகத் தின் பிள்ளை தானே ஒட்டகம். ஒவ்வொரு ஒட்டகமும் ஒரு காலத்தில் குட்டியாக இருந்ததுதானே!'' என்று விளக்கஞ் செய்தனர்.

ஜாஹிர் பின் ஹஸ்ம் (Zahir-bin-Hazm) என்பவர் ஒரு கிராமவாசி. அவருக்கு வேட்டையாடுவதில் மிகப் பிரியம். அவர் அடிக்கடி பெருமானாருக்கு அன்பளிப்பு கள் கொண்டு வருவார். பெருமானாரும் அவருக்கு

அன்பளிப்புகள் கொடுப்பது வழக்கம். அவ்வாறு செய்யும் பொழுது ஜாஹிரைப் பற்றிக் கேலியாக ''ஜாஹிர் என்னுடைய கிராமப்பிரதிநிதி. நான் அவரது நகரப் பிரதிநிதி'' என்று பிறரிடம் பெருமானார் கூறுவது வழக்கம்.

மதப் பிரச்சாரம் : ''ஒரே தெய்வம், ஒரே சகோதரத்துவம்'' என்ற இஸ்லாமியப் பிரச்சாரத்தை முஹம்மத் நபி எவ்வாறு செய்தனர்? கத்தியால் அல்ல, பலவந்தத்தால் அல்ல. இரத்தம் சிந்தியல்ல. ஆக்ரமிப்பால் அல்ல. இஸ்லாமியப் பிரச்சாரத்திலே, குர்ஆன் காட்டிய வழி ஒன்றையே பெருமானார் பின்பற்றினர். குர்ஆன் எவ்வாறு பிரச்சாரம் செய்ய அனுமதிக்கிறது? இதைக் குறித்துக் குர்ஆனுடைய போதனைகள் மூன்று.

முதலாவது, மதப்பிரச்சாரத்தில் பலவந்தம் கிடையாது. இரண்டாவது, பிற மதஸ்தருடன் தர்க்கம் புரியும்பொழுது உயர்ந்த ஒழுக்க நெறியில் புரிய வேண்டும். மூன்றாவது, எல்லா இனத்தாருக்கும் இறைவனால் அனுப்பப்பட்ட நபிமார்களை முஸ்லிம்கள் கண்ணியப்படுத்தவேண்டும். இந்த மூன்றே இஸ்லாம் பிரயோகித்த மூன்று வாட்கள். வேறுவாளை இஸ்லாம் கையாளவில்லை.

---

# 3 தனிச் சிறப்புக்கள்

பெருமானாரின் வாழ்க்கை சில தனிச் சிறப்புகளை உடையது, மதத்தலைவர், அரசியல் தலைவர், தேசியத் தலைவர் என்ற மூன்று தலைமைத்துவங்களும் ஒன்றுபட்டு உலக வரலாற்றில் பெருமானார் ஒருவரிடமே காணப் படுகின்றன. மேலும், தமது தூதின் வெற்றியைத் தமது வாழ்க்கையிலே கண்ணால் கண்ட இறைதூதர் நபிநாயகம் ஒருவரே. இதைத் தவிர, உலகம் முழு மைக்கும் மொழி, இன, தேசிய வேறுபாடில்லாமல் தூது கொண்டுவந்த பெருமை பெருமானார் ஒரு வருக்கே உரியது. மனித குலமெல்லாம் ஒரே இனம் என்று பெருமானார் ஒருவரே போதித்து, அதற்கேற்ற திட்டத்தை உலகினுக்கு அளித்தனர். அதனோடு பெரு மானரது ஜீவிதமானது, மானிட வாழ்க்கையின் எல்லாத் துறைகளுக்கும் வழிகாட்டியாக இருக்கிறது. இறுதியாக உலக சமாதனத்திற்காக அஸ்திவாரம் நாட்டிய சிறப்பும் பெருமானாருக்கு உரியது, அதாவது. எல்லா மதங்களுக்கும் பொதுவான உண்மைகளை அஸ்தி வாரமாகக் கொண்டு, கட்டிடம் அமைத்து, எல்லோ ரும் சுபீட்ச வாழ்வு வாழலாம் என்று இஸ்லாம் கூறு கின்றது.

''உங்களுக்கும் நமக்குமிடையில் பொதுவான— நேர்மையான விஷயத்திற்கு, பிரச்சினைக்கு வாருங்கள்' என்று குர்ஆன் (3:60) அழைப்பு விடுகிறது.

இதுவரை நாம் அறிந்த அரிய பண்பு நலன்களே பெருமானாருக்கு வெற்றி அளித்தன. அவையே பெரு மானாருடைய வாளாகப் பயனித்தன. இஸ்லாம் வாளால் பரவியது என்று குற்றம் சாட்டுவோர், பெரு மானாரின் வாழ்க்கையை அறியாதோரே. பத்தாண்டு காலம், பல போர்க்களங்களில் முஸ்லிம்களை எதிரிகள் எதிர்த்தார்கள். அப்போரின் முடிவாக எழுநூறு முஸ்லி மல்லாதாரும் மூந்நூறு முஸ்லிம்களும் இறந்தார்கள். ஓர் அணுக்குண்டு ஒரு கோடி மக்களைக் கொல்லும். இக்

காலத்தவருக்கு இஸ்லாமிய போர்களில் உண்டான இந்த அற்பமான நஷ்டம் பெரிதல்ல என்றே தோன்றும்.

வாழ்க்கைக்கு முன்மாதிரி: பெருமானாருக்குப் பொன்னும் பூமியும் புகழும் இருந்தன. விரும்பியபடி போகங்கள் அனுபவிக்க எல்லா வசதிகளும் இருந்தன. என்றாலும், பெருமானாரின் எளிய வாழ்க்கையானது ஏழையின் வாழ்க்கையாகவே, இருந்தது. செல்வம் சேர்க்கவில்லை. மாடமாளிகைகளில் வசிக்கவில்லை. பட்டாடை உடுத்தவில்லை. தொடர்ச்சியாகப் பல நாள் வயிறு நிறைய ஆகாரம் கிடைக்கவில்லை.

மாநபியின் வாழ்க்கை உலகினிற்கொரு மணிவிளக்காக அமைந்துள்ளது பெருமானார் ஒப்பற்ற பண்பினர். சீர்திருத்தச் செம்மல். தம்மைத் ''தேவகுமாரன்'' ''அவதார புருடன்,'' ''அமரன்'' என்று கூறவில்லை, ''நான் உங்களைப் போல் ஒரு மனிதனே. ஆனால் இறைதூதன்!'' எனக் கூறுவர்.

ஆட்சியாளன் பிரஜை, சேனாதிபதி சேனாவீரன், தகப்பன் மகன், கணவன் மனைவி, வியாபாரி வேலைக்காரன், முதலாளி பாட்டாளி, பணக்காரன் ஏழை, நீதி நிர்வாகி முதலிய எல்லா துறைகளிலும் எல்லாச் சூழ்நிலைகளிலும் இருப்போருக்கு பெருமானாரின் வாழ்க்கை சிறந்ததொரு முன்மாதிரியாக இருக்கிறது.

அழகில் சிறந்தோர் யூஸுப் நபி பொறுமைக்கு உறைவிடம் ஈஸா நபி. அஹிம்சையில் உயர்ந்தோர் புத்தர், வீரத்திற்கு அலெக்சாந்தர்; அரசியலில்மார்கஸ் அரீலியஸ். அடிமை ஒழிப்பில் ஆபிரகாம் லிங்கன். ஆனால், இவையும் பிறவுமான பற்பலப் பண்புகள் ஒரே மனிதரிடம் காண வேண்டுமாயின் முஹம்மத் நபியிடமே காணமுடியும்,

''வசிப்பதற்கு ஒரு வீடு—வெட்கத்தை மறைக்க ஒரு ஆடை—வயிற்றுக்குக் காய்ந்து வறண்டதொரு ரொட்டி—தண்ணீர்—இவற்றைத் தவிர மனிதனுக்கு வேறு பொருளில் உரிமை கிடையாது'' என்று பெருமானார் மொழிவர்.

எளிய இல்லத்தில், எளிய ஆடையில், எளிய ஆகாரத்தில் பெருமானாரது வாழ்க்கை நடத்தப் பட்டது. சில சமயம் ஆகாரமே இல்லாமல் பட்டினி யாகவும் இருப்பர்.

**பசிதணிக்கக் கல்கட்டிப் பருங்கயிற்றுக் கட்டிலின்மேல்**
**பசுமேனி நோவடையப் படுத்திருந்த நாயகமே!**

பெருமானார் இவ்வுலகை விட்டுப் பிரியும்நாளிலே வீட்டில் சில காசுகள் இருந்தன. அவற்றில் ஒரு பாகம் கடனுக்குக் கொடுக்கப்பட்டது மீதியைப் பிச்சைக் கேட்டு வந்த ஓர் ஏழைக்குக் கொடுக்கப்பட்டது. அன்று பெருமானாரது உடலில் இருந்த உடையும் ஒட்டுப் போட்டிருந்தது.

'ஒரே இறைவன், ஒரே மக்கள் இனம்' என்று பெருமானார் பிரகடனஞ் செய்தவுடன், பெருமானார் மீதும் அன்னாரைப் பின்பற்றிய முஸ்லிம்கள்மீதும் இரக்கமற்ற இடுக்கண்கள் இழைக்கப்பட்டன. இவற்றி லிருந்த காப்பாற்ற இருமுறை முஸ்லிம்கள் அபி ஸீனியா நாட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். மக்காவி லிருந்து எதிரிகள் அபிஸீனியா அரசரிடம் சென்று, அந்த முஸ்லிம்களைத் தங்களிடம் கொடுத்துவிடும்படி கோரினார்கள். ஆனால், அந்த நாட்டுக்கிறிஸ்துவ மன்னர் முஸ்லிம்களுக்கு அடைக்கலம் தந்தார். பதின்மூன்று ஆண்டுகள் இவ்வாறு விரோதித்து, இறுதியாக ஒருநாள் இரவில் பெருமானாரைக் கொன்றுவிட முடிவு செய்து அன்னார், படுத்திருந்த வீட்டைச் சூழ்ந்து நின்றார்கள்,

ஆனுல், பெருமானுர் அங்கிருந்து பகைவருக்குத் தெரியாமல் புறப்பட்டு முந்நூறு மைல் தொலேவிலுள்ள மதீனு நகருக்குச்சென்று வசித்தனர். ஆனுல், மக்காவாசிகள் முஸ்லிம்களே மதீனுவிலும் வாழவிடவில்லே. ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டில், மதீனுவின் அருகிலுள்ள பத்ர் என்னுமிடத்திலும் ஹிஜ்ரி மூன்ரும் ஆண்டில் உஹத் என்னுமிடத்திலும் ஹிஜ்ரி ஐந்தாம் ஆண்டில் அகழ்ப் போரிலும் எதிர்த்தார்கள்.

மதீனு நகரிலே, முஸ்லிம்களேப் போல் பாசாங்கு செய்த வேஷதாரிகள், நயவஞ்சகர்கள்—உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர் சிலர்—இஸ்லாத்தை அழிக்க முயன்ருர்கள்!

**வாள்போல் பகைவரை அஞ்சகற் அஞ்சுக**
**கேள்போல் பகைவர் தொடர்பு.**

இந்த நயவஞ்சகரின் தலேவரான அப்துல்லாஹ் பின் உபை (Abdullah-bin-Ubai) இரவிலும் பகலிலும் இஸ்லாத்தை அழிக்கும் முயற்சியில் இருந்தார். இத்தகைய மனிதர் இறந்தபொழுது, பெருமானுர் அவருக்காக இறைவனிடம் பிரார்த்தனே செய்தனர். தமது அங்கியை அனுப்பி அவரது உடலே மறைத்து, அவருக்கு இறுதி மரியாதை செய்தனர்.

ஹிஜ்ரி ஆரும் ஆண்டில் ஹுதைபிய்யாஹ் என்னுமிடத்தில் மக்காவாசிகளுக்குச் சாதமாக, பத்தாண்டுப் போர் நிறுத்த உடன்படிக்கை செய்யப்பட்டது. எனினும், அடுத்த இரண்டு ஆண்டுகளில், மக்காவாசிகள் அந்த உடன்படிக்கைக்கு விரோதமாக நடந்தமையால், பெருமானுர் மக்காவுக்குச் சென்று, பலாத்காரமின்றி, இரத்தஞ் சிந்தாமல் மக்காவை வென்றனர். இருபது ஆண்டுகளாகத் தொடர்ச்சியாகத் தம்மைப் பகைத்த கடும்பகைவரை நோக்கிப் பெருமானுர், ''இன்று நன்மையும் அறச்செயல்களும் நிரம்பிய நாளாகும்! போங்கள்! நீங்கள் மன்னிக்கப்பட்டீர்கள்'' என்று விளம்பரப்படுத்தினர்.

பத்ர் போரில் கைதியாக அகப்பட்ட திராப்பகை வரை உயிருடன் விட்டவர் யார்? உஹத் போரில் காயப்படுத்தியோருக்காகப் பிரார்த்தனை செய்தவர் யார்? கல்மாரி பொழிந்த தாயிப் நகரத்தாரை மன்னிக்கும்படி இறைவனை வேண்டியவர் யார்? மதீனா நகரிலே தொடர்ச்சியாகத் துன்பங்கொடுத்த நயவஞ்சகரைப் பொறுமையுடன் நடத்தியோர் யார்? உணவில் நஞ்சிட்டுக் கொல்ல முயன்ற யூதப் பெண்ணை மன்னித்தவர் யார்? மக்கா வெற்றியன்று கடும்பகைவரை மன்னித்தவர் யார்?

இந்தக் கருணை வள்ளலை, ''வாளால் மதத்தைப் பரப்பினார்'' என்று சிலர் சரித்திர ஆதாரமில்லாத பொய்க் குற்றம் சாட்டுகிறார்கள். எதிரிகள் ஆக்கிரமித்து வந்து, எதிர்த்தபொழுது, தற்காப்பிற்காகப் போர் செய்யும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சுமார் எண்பது இடங்களில் பெருமானார் காலத்தில் எதிரிகளுடன் எதிர்ப்பு ஏற்பட்டது. இந்த எதிர்ப்புகள் ஒவ்வொன்றிலும் சராசரி ஏழு எதிரிகளே கைதியானார்கள். சராசரி பதின்மூன்று எதிரிகளே இறந்தார்கள். இதுதான் சரித்திரம். இதுவே உண்மை.

இக்காலத்திலே—இலட்சக்கணக்கான மக்களை ஒரே அணுக்குண்டில் கொன்று குவிக்கும் இக்காலத்தில், மேல் நாட்டு நாகரித்தவரும், இஸ்லாத்தை அறிந்து கொள்ள மறுக்கும் சில கீழ் நாட்டவரும், முஹம்மத் நபியை—தமது ஆயுளில் வாளால் ஒருவரையும் கொல்லாத கருணைக் கடலை—ஏன் பழிக்கின்றார்கள்?

 

# 4. நபிநாயகத்தின் நன்மொழிகள்

''உலகத்தைப் படைத்துக் காக்கும் இறைவன் ஒருவனே. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் பிறக்கவுமில்லை; பிள்ளை பெறவுமில்லை. அவனுக்கு இணை இல்லை.''

(குர்ஆன் 112 : 1-4)

மக்கள் அனைவரும் சகோதரர்கள். ஒழுக்கமும் இறை அச்சமுமே மக்களைக் கீழோர் மேலோர் என்று பிரிக்கும். இறைவனிடம் எல்லோரும் சமம். இனச் செருக்கு ஜாதிச் செருக்கு, கோத்திரச் செருக்கு, நிறச் செருக்கு, நாட்டுச் செருக்கு முதலியன கூடாது.

''மக்களெல்லாம் ஒரே இனத்தவரே''

(குர்ஆன் 2-213)

''உலகிலுள்ள ஒவ்வொரு இனத்தாருக்கும் இறை தூதர்கள் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் அனைவரையும் போற்ற வேண்டும்.''

(குர்ஆன் 35:22, 14:4, 35:24, 10:47, 4:164, 1:4)

இஸ்லாம் மதம் பூரண மதம். முன் வந்த இறை தூதர்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கோ, நாட்டிற்கோ, இனத்திற்கோ ஏற்ற மதத்தை உபதேசித்தார்கள். ஆனால், இஸ்லாமின் போதனைகள் எல்லா காலங்களுக்கும், எல்லா நாட்டவருக்கும், எல்லா மக்களுக்கும் ஏற்றவை.

குர்ஆன் வேதம் தூய்மையானது. முந்திய வேதங்களில் சில மறைந்தன; பல மாற்றப்பட்டன. ஆனால், குர்ஆன் பதினான்கு நூற்றாண்டுகளாக ஓர் எழுத்தும் மாறாத நிலைமையில் இருக்கிறது. குர்ஆன் மொழி அரபிமொழி. அது ஜீவமொழி.

சீமான்கள் தங்கள் செல்வத்திலே ஆண்டுதோறும் இரண்டரை சதவிகிதம் ஜகாத் (Zakat) என்ற தரும வரி கொடுத்து ஏழைகளையும் பலவீனரையும் காப்பாற்ற வேண்டும். இதனால், தொழிலாளி முதலாளி பிரச்சினைகள் ஏற்படாது.

தொழிலுக்கு உயர்வு உண்டு. வாழ்க்கையிலே உயர்ந்தோன், தாழ்ந்தோன்—சீமான், ஏழை-எஜமான் வேலைக்காரன்—முதலாளி, தொழிலாளி—என்ற வேறுபாடுகள் உண்டாக்கி ஒருவரையொருவர் துன்பப் படுத்தலாகாது.

''பாட்டாளி மக்களின் வியர்வை உலருமுன், அவருக்குரிய ஊதியத்தை உவந்து கொடுங்கள்.''
—நபிமொழி.

**வியர்வையது உலருமுன்னர் உழைத்தவரின் கூலியினை**
**நயமுடனே கொடுக்கவென்று நவின்றநபி நாயகமே!**

பிற மதங்களைப் போற்றவேண்டும். எல்லா மதத் தலைவர்களையும், எல்லா வேதங்களையும் போற்ற வேண்டும். பிற வணக்க ஸ்தலங்களைப் பாதுகாக்க வேண்டும். இதர மதத்தாருடன் தர்க்கஞ் செய்யும் பொழுது அவர்களுடன் இன்சொல்லால் உரையாட வேண்டும். துவேஷம் கூடாது.

பெண்மையின் உயர்வு: இந்த இருபதாம் நூற்றாண்டிலே.

**பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு**
**மண்ணடிமை தீர்வதில்லை.**

என்கிறார் கவிஞர். ஆனால், பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னரே பெருமானார் பெண்ணடிமையைத் தீர்த்துவிட்டனர். உலக வரலாற்றிலே இஸ்லாம் ஒன்றே பெண் இனத்திற்கு முதலாவதாகப் பெருமையும் உயர்வும் உரிமைகளும் அளித்தது. பெண்களுக்குச்

சொத்துரிமை, திருமண உரிமை, விவாக விலக்கு உரிமை, மறுமண உரிமை, வாரிஸ் உரிமை முதலிய வற்றை இஸ்லாம் அளித்தது.

''தாயின் காலடியில் சேயின் சுவனபதி''

—நபிமொழி.

மது அருந்தல், சூதாடல், குறிபார்த்தல் முதலான தீச்செயல்கள் அடியோடு ஒழிக்கப்பட்டன.

இறைவனுக்கும் மனிதனுக்குமிடையில் தரகரும் சடங்குகளும் கூடாது. எனவே சிலை வணக்கம், பட வணக்கம், பூஜை முதலியன இஸ்லாத்தில் இல்லை.

நவீன அரசியல் அமைக்கப்பட்டது. பெருமானார் அமைத்த ஆட்சி முறையிலே, மக்கள் இறைநெறியில் நடந்தார்கள். உலகினில் ஆட்சி இறைவனுடையதே. இறைவனுடைய கட்டளைகளைத்தான் மக்கள் பின்பற்ற வேண்டும். நாம் எண்ணும் எண்ணத்தையும், செய்யும் செயலையும் இறைவன் பார்க்கிறான். தனியரசோ, சட்டசபையோ அவசியமில்லை. அரசனும் பிரஜையும் இறைவன் சட்டத்திற்கு முன் சமமானவர்கள். போலீஸும் காவற் கூடங்களும் அவசியமில்லை. குற்றம் செய்தால் தானே இவற்றின் அவசியமுண்டு?

அப்லாதூண் (Plato) அரஸ்து (Aristotle) என்ற கிரேக்க மேதைகள் கண்ட கனவும், ஈஸா நபி விரும்பிய சோஷியலிஸ்ட் கொள்கைகளும் இஸ்லாமியக்குடியரசில் செயலாற்றப்பட்டன.

பரோபகார வாழ்க்கை: மனிதன் தனக்காக மட்டும் வாழக்கூடாது. பிறருக்காகவும் வாழ வேண்டும். இறைவனுடைய படைப்புகளுக்குப் பணி செய்தலே இறை வணக்கமாகும். இதையே இறைவன் விரும்புகிறான். தன் வாழ்வு அழிந்தாலும் மக்கள் வாழ்வு மலர வேண்டும். ''நான் உண்டு என் வாழ்வு

உண்டு'' என்ற குறுகிய மனப்பான்மை இழிவான தாகும். நமது சகோதர சகோதரிகளுக்கும், மிருகங் களுக்கும், பறவைகளுக்கும், எல்லா உயிர்களுக்கும் செய்யும் தொண்டில் இறைவனுக்குச் செய்யும் தொண் டானது அடங்கியிருக்கிறது.

ரமலான் மாதமே நலம் நிறைந்த வாழ்க்கை நடத் தும் நல்ல காலம். முப்பது நாள் உண்ணு நோன்பு, ஏழைகளுக்குத் தருமம். ஆணவத்துக்கு அடிப்படை மமதை. மமதைக்கு உயிரே உடல். உடலுக்கு உரம் உணவு. எனவே, உணவைக் குறைத்து, உடலின் மமதையை மறைத்து, ஆணவத்தையும் சுயநலத்தை யும் அகற்றும் திட்டம் ரமலான் மாதத்திய உண்ணு நோன்பு.

தாம்விரும்பும் பொருளினையே தம்மோர்க்கு விரும்பாதார்
யாம்விரும்பும் மூமினுகார் எனநவிலும் நாயகமே!
தனக்கேனும் பிறர்க்கேனும் தகுபணிகள் செய்யாதோன்
எனதிறைவன் பரிசுபெருன் எனநவிலும் நாயகமே!

அற்புதச் சமுதாயம்: அருளாளன், அன்புடை யோன். மன்னிப்பவன், நமது பாவங்களை மறைப்ப வன், இரக்கமுள்ளவன், போஷிப்பவன், பாதுகாப்ப வன், நேர்வழி நடத்துவோன், புனிதமானவன், சாந்தி நிறைந்தோன், அழைப்போருக்கு மறுமொழி கூறு வோன் என்ற பல பண்புகள் இறைவனுக்கு உண்டு. நமது வாழ்க்கையிலே இத்தகைய இறை பண்புகளை நமதாக்கிக் கொள்வதே நமது குறிக்கோளாக இருக்க வேண்டும். தான் இறைவனுடைய பிரதிநிதி என்பதை மனிதன் மறக்கலாகாது.

குர்ஆனுடைய விரிவுரையே நபிமணியின் வாழ்க்கை. ஸஹாபா என்ற நாயக தோழர்களும் அவ்வாறே நடந்தார்கள். இறைவனுக்குப் பயந்து நேர்மையான வாழ்க்கை நடத்தும் ஒரு சமுதாயத்தைச் சமைத்த பெருமை பெருமானுருக்கு உரியது. இச்சமு தாயத்திலே நீதிபதிகளும், நீதி மன்றங்களும், காவற்

படைகளும், காவற்கூடங்களும் தேவையில்லை. தப்பித் தவறிக் குற்றஞ்செய்தோர் உடனே சென்று தாமாகவே மன்னிப்புக் கேட்பார்கள். சட்டத்தாலும், தண்டத் தாலும் இத்தகைய சமுதாயம் உண்டாக்க முடியாது. பெருமானாருடைய முன் மாதிரியான வாழ்க்கையே இந்தச் சமுதாய வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்தது.

பெருமானரது காலத்திற்குமுன் அரபிய மக்கள் நாகரிகமற்ற ஒருவித காட்டுமிராண்டி வாழ்வே வாழ்ந் தனர். பாலைவனச் சோலைகளில் பெரும்பாலான மக்கள் கூட்டம் கூட்டமாக கோத்திரம் கோத்திரமாக கும்பல் கும்பலாக வாழ்ந்தார்கள். ஒரு கோத்திரத் திற்கும் அடுத்த கோத்திரத்திற்கும் இடையே சிறு பூசல் நிகழும். பிறகு, அந்தச் சிறு வித்திலிருந்து மாபெரும் போர்மரம் தோன்றும்; அதன் விளைவாக இருகட்சியாரும் போர்க்களத்தில்தான் சந்திப்பார்கள். கடும்போர் நிகழும். வெகு காலம் நீடிக்கும். பாலை வனத்தின் வெண்மணலெல்லாம் செந்நிற மணலாக மாறிவிடும். பிறகு எந்நாளும் ஒன்று சேராமல் பகை வராகவே வாழ்வார்.

பெருமானரது அன்பும் கனிவும் அன்னர் வகுத்த அற்புதச் சமுதாயத் திட்டமும், அந்த மக்களது அறியாமை இருளை நீக்கி, பேரின்ப வாழ்விற்கு வழி வகுத்தது.

கல்வியின் பெருமை :

**சீனாவிற் சென்றேனும் சீர்கல்வி பெறுகவெனத்**
**தேனான வாய்திறந்து தெளிவூட்டும் நாயகமே!**

1. சீனா சென்றாயினும் அறிவைத் தேடுங்கள்.

2. கல்வி கற்போன் இறைவணக்கம் செய்கிறான். கல்வியை உயர்த்துவோன் இறைவனை உயர்த்துகிறான். கல்வியைப் புகழ்வோன் இறைவனைப் புகழ்கிறான்.

3. இறை நெறியில் நின்று உயிர்விடும் உத்தமரின் இரத்தத்தைவிட மெய்நெறியில் நின்றெழுகும் எழுத்தாளனுடைய எழுதுகோலின் மையே புனிதமானது.

4. ஆண், பெண் இருபாலரும் கல்வியைப் பெறுவது கடமையாகும்—நபிமொழி.

பள்ளிக்குச் சென்று கல்வி கற்காத பெருமானார், அறிவுக்கு நீர் ஊற்றி வளர்த்தனர். பத்து முஸ்லிம்களுக்கு கல்வி புகட்டிய ஒவ்வொரு போர்க்கைதியையும் விடுதலை செய்தனர்.

**கல்விக்காய் உயிர்கொடுப்பான் காசியினியில்மறையாமல்**
**நல்லிதுமே வாழ்வென்ன நவின்றநபி நாயகமே!**

பகுத்தறிவு: மனிதனுக்கு இறைவனால் கொடுக்கப்பட்ட அருமையான பொக்கிஷம் பகுத்தறிவாகும். இதை நன்கு பயன்படுத்தினால் மனிதன் உயர்வடையலாம். குருட்டு நம்பிக்கை கூடாது.

ஒரு சமயம் முஆத் என்பவரைப் பெருமானார் கவர்னராக நியமித்து, அவருடன் உரையாடினார்—

பெருமானார்: நீர் எவ்வழி நின்று ஆட்சி செய்வீர்!

முஆத்: குர்ஆன் சொல்வழி செய்வேன்.

பெருமானார்: குர்ஆனில் உமக்கு வழி கிடைக்காவிட்டால்?

முஆத்: இறைதூதர்சொல், செயல் (ஸுன்னத்) வழி செய்வேன்.

பெருமானார்: என் சொல்லும் அந்தப் பிரச்சினைக்கு உதவியாக இல்லாவிட்டால் என்ன செய்வீர்?

முஆத்: என் பகுத்தறிவைக் கொண்டு முடிவு செய்வேன்.

பெருமானார்: அதுவே சரி.

இவ்வாறு, பெருமானார் பகுத்தறிவிற்குப் பெருமை அளித்தனர்.

**அறிவுடையச் சென்றிடுவோன் அதிலிருந்து திரும்பும்வரை இறைவழியில் நின்றிடுமென் றியம்புகின்ற நாயகமே!**

சிந்தனைச் செல்வம் : ''ஒரு விநாடி சிந்தனை செய்தலானது ஒரு முழு இரவின் வணக்கத்தைவிட மேலானது—நபிமொழி.

ஆராயுங்கள்! சிந்தியுங்கள்! இறைவனுடைய இயற்கையின் காட்சிகளை நோட்டமிடுங்கள்! பண்டைக்கால மக்களின் வரலாறுகளைப் பற்றிச் சிந்தனை செய்யுங்கள்! என்றெல்லாம் குர்ஆன் கூறுகிறது.

அகவாழ்வும் புறவாழ்வும்: உலகிலே சில பெரியார் அகவாழ்விற்கும், இன்னும் சிலர் புறவாழ்விற்கும் வழி வகுத்தார்கள். இரண்டும் சேர்ந்ததே பூரண வாழ்வு, இத்தகைய பூரண வாழ்விற்குரிய சீர்திருத்தங்கள் செய்து வெற்றி கண்டவர் பெருமானாரே. இஸ்லாமிய இறைவழிபாடு, நோன்பு, ஏழைவரி, ஹஜ் ஆகியவை அகத்தூய்மை உண்டாக்கும். இதைப்போலவே, புறவாழ்க்கைக்காக அரசியல், பொருளியல், சமூகம் முதலிய துறைகளில் பெருமானார் அற்புதச் சீர்த்திருத்தங்கள் செய்து, மக்கள் பூரணமாக தூய வாழ்க்கை அடையுமாறு வழிவகுத்தனர். அன்று பெருமானார் செய்த சீர்திருத்தங்களை இன்றைய நாகரிக உலகமானது நவீன பெயர்கள் கொடுத்துப் பின்பற்றி வருகின்றது..

சுவர்க்க உரிமை : நன்னம்பிக்கையும் நற்செயல்களும் உள்ள எல்லா மக்களுக்கும் சுவர்க்கம் உரியது'' என்று குர்ஆன் கூறுகிறது. ''அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்''-சகல லோகங்களுக்கும் அதிபதியான இறைவனுக்கே புகழ் அனைத்தும் உரியது-என்று குர்ஆன் ஆரம்பமாகிறது. இதில் இறைவனை, ''முஸ்லிம்களுடைய இறைவன் என்று கூறப்படவில்லை'' என்பது கவனிக்கத்தக்கது.

மதுவிலக்கு : இது உலகிற்கு ஒரு பெரும் பாக்கியமாகும். இன்று முஸ்லிம் நாடுகளில் செயலளவில் மதுவிலக்குப் பின்பற்றப்படுகிறது. முஸ்லிமல்லாத நாடுகளில் சட்டங்கள் மூலமாய் மது ஒழிப்புச் செய்யமுயற்சி செய்யப்படுகிறது.

கொடிய வட்டி வாங்கல்: இதன் அடிப்படை கருத்தென்ன? மூலதனத்தை வைத்துக்கொண்டு அதை ஏழைகளுக்குக் கொடுத்து, கொடிய வட்டி வசூலித்து, சீமான்கள் வறியோரை வதைக்கின்றனர். ஆனால், இஸ்லாமிய ஜகாத் முறையிலே சீமானும் ஏழையும் ஒருவரோடொருவர் அன்பினால் இணைக்கப்படுகிறார்கள். இன்றைய குஷ்யா இஸ்லாமியக் கொள்கைகளைப் பின்பற்றி வட்டியைக் குறைக்கின்றது.

உலகில் இறைவனால் பற்பல காலங்களில் அனுப்பப்பட்ட எல்லா நபிமார்களையும் எல்லா வேதங்களையும் ஒப்புக் கொண்டு அவற்றைப் போற்றிய முதல்வர் முஹம்மத் நபியே.

முஹம்மத் நபி இறுதி நபி. குர்ஆன் வேதம் இறுதியான வேதம். ''எல்லா மக்களும் ஒரே இனத்தார்'' என்று குர்ஆன் (பக்ரா: 213) கூறுகிறது. ''உலகங்களுக்குக் கருணையாக அனுப்பப்பட்டவர்'' என்று முஹம்மத் நபியை குர்ஆன் கூறுகிறது. இந்த இறுதி நபிக்கு முன் வந்த நபிமார்கள் ஒரு சொந்த நாட்டிற்கு அல்லது ஒரு இனத்திற்கு மட்டும் போதகராகவும் அந்தந்தக் காலத்திற்காகவும் அனுப்பப்பட்டார்கள். ஆனால், அந்த நபிமார்களுடைய போதனைகள் புனிதத்தன்மை இழந்தன, வேதங்களின் பூர்வ உண்மைகள் மறைந்தன. மக்கள் நேர்வழி தவறி நடந்தார்கள். எனவே, எல்லா இனத்தாருக்கும் நேர்வழி காட்ட ஒரு நபி தேவையாயிருந்தார். முன் வந்த எல்லா நபிமார்களுடைய போதனைகளைத் தொகுத்துப் போதிப்போர் தேவையாயிருந்தார். ஆகவே, இஸ்லாம் என்ற சர்வதேச மதத்தை முஹம்மத் என்ற இறுதி இறைதூதர் வந்தனர். குர்ஆன் என்ற இறுதி வேதமும் வந்தது.

இறைவனது கட்டளைகளை முஹம்மத் நபி தமது வாழ்வில் அப்படியே செயலாற்றிக் காட்டினர். அவரது மானுஷீக வாழ்க்கையை எல்லா மக்களும் பின்பற்ற முடியும். மேலும், குர்ஆன் வேதம் இன்றுவரை கூட்டாமலும் குறைக்காமலும் அப்படியே இருக்கிறது. எனவே இன்னெரு நபியும், இன்னெரு வேதமும் இனி உலகிற்குத் தேவையில்லை.

**மனிதன் பின்பற்றக்கூடிய நன்மணிகள் :**

உலகப் பெரியார்கள் பலர், ''இதைச் செய்யலாகாது! அதைச் செய்தல் வேண்டும்!'' என்று போதனை மட்டும் செய்து சென்ருர்கள். 'மன்னித்துவிடு! கர்வம் கொள்ளாதே!' என்று நாவளவில் சொன்னுல் மட்டும் போதாது சொற்படி அவரவர் வாழ்க்கையில் செய்து காட்டியோரே, மனிதராகிய நாம் பின்பற்றக்கூடிய மகான்களாவர். பெருமானுரது வாழ்கையிலே சொல் வேறு, செயல் வேறு என்பதே கிடையாது. அனுதைக் குழந்தைப் பருவமுதல், அரபியாவின் மன்னராக இருந்த காலம் வரையில், வாழ்க்கையில் வேறுபட்ட துறைகளில் அரசராகவும், ராஜதந்திரியாகவும் வீரராயும், படைத்தலைவராகவும், சட்டம் அமைப்போராகவும், நீதிபதியாகவும், வணிகராகவும், நண்பராகவும், தகப்பனுகவும், மகனுகவும், கணவராகவும், அண்டை வீட்டாரராகவும், பெருமானுரது வாழ்க்கை ஒளிவீசுகின்றது. நபிபெருமானுடைய அன்ருட வாழ்க்கையின் அருஞ்செயல்கள்—சொற்களல்ல—நமக்கு வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன.

எந்தப் போதகரின் சொல்லும் செயலும் எல்லாக் காலங்களிலும், எல்லா மக்களாலும், எல்லா இடங்களிலும், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும், நடைமுறையில் தினசரி வாழ்க்கையில் அனுசரிக்கக்கூடியதாக இருத்தல் வேண்டும். இந்த அளவுகோலை உபயோகித்தாலும், பெருமானுரது சொல்லும், செயலும் நடைமுறையில் மனிதரால் அனுசரிக்கச் சாத்தியமானவையாகும்.

செயலால் மக்களுக்கு வழிகாட்டிய தனிச்சிறப்பு, மக்களுடன் சமநிலையில் கூடி வாழ்ந்த பெருமை, இதர இறை தூதரோடு ஒப்பிடும்பொழுது பெருமானார் ஒருவருக்கே உரியது. மேலும், சரித்திர ஏடுகளில் காணப்படாத இறை தூதர்கள் எத்தனையோ பேர் இருக்கையிலே, நபிநாயகத்தின் வாழ்க்கை முழுதும் சரித்திர அடிப்படையிலே அமைந்ததாகும். எனவே, மனித வாழ்க்கையின் பூர்ணத் தன்மையுடையது பெருமானாரது வாழ்க்கையாகும்.

பெருமானாரின் வாழ்க்கை பல துறை வாழ்க்கை. அதனால் உலகிற்குக் கிடைத்த பலன்களும் அளவு கடந்தன. அனாதை முஹம்மத், அன்பர் முஹம்மத். அமீன் முஹம்மத், நீதர் முஹம்மத், வணிகர் முஹம்மத், கணவர் முஹம்மத், தந்தை முஹம்மத், குடும்பத்தலைவர் முஹம்மத், நண்பர் முஹம்மத் எஜமான் முஹம்மத், பக்தர் முஹம்மத் இறைதூதர் முஹம்மத் பிரசாரகர் முஹம்மத், பொறுமையாளர் முஹம்மத், இடம் பெயர்ந்து செல்லும் முஹம்மத், குடியரசுத்தலைவர் முஹம்மத், உடன்பாடுசெய்யும் முஹம்மத், சீர்திருத்தவாதி முஹம்மத், சொல்லுருவம் முஹம்மத், செயலுருவம் முஹம்மத்-இவ்வாறு எந்தக் கோணத்திலும் பெருமானார் மனிதகுலத்திற்கு முன்மாதிரியாகத் திகழ்கின்றார்.

எனவே, உலகம் போற்றும் உத்தம நபி என்னும் தனிச் சிறப்பு பெருமானார் ஒருவருக்கே உரியதாகும். நபிநாயகம் தமது வாழ்நாளிலே தமது குறிக்கோளை அடைந்தனர். பிறருக்குச் சொல்லியவற்றைத் தமது வாழ்க்கையில் செயலுருவத்தில் காண்பித்தனர். ஒரே மனிதர் மத ஸ்தாபகராயும், அரசராயும், தேசியத்தலைவராயும் இருந்தார் என்றால் உலக வரலாற்றிலே பெருமானார் ஒருவரே. சரித்திரச் சான்றுள்ள இறைதூதரது வாழ்க்கை வரலாறு பெருமானார் ஒருவருடையதே. குர்ஆன் வேதத்தின் விரிவுரையாகத் தமது வாழ்க்கையை நடத்திய பெருமையும் பெருமானாருக்கே உரியது.

''இறைவனுக்கே தலைசாய்த்தல் வேண்டும்'' என்ற நபி மணியின் போதனையை-இஸ்லாமை-இயற்கையின் விதிகளை-எல்லா மக்களும் ஒப்புக் கொள்வர். மக்களது அறிவு வளர வளர எல்லோரும் நபி பெருமானாரின் வாழ்க்கை வரலாற்றைப் படித்து, அதைப் பின்பற்ருமல் இருக்கமுடியாது.

வாழ்க்கையில் ஒருபொழுதும் பொய் சொல்லாத மகா ஆத்மீகத் தலைவரை ஏன் பின்பற்றக்கூடாது?

வாக்குறுதியை எப்பொழுதாயினும் தகர்த்தெறியாத மகானை ஏன் மதிக்கக்கூடாது?

எண்பது போர்க்களங்களில் பங்கெடுத்தும் ஒருவரையும் தமது வாளால் கொல்லாத ஒரு பெருந்தகையை ஏன் போற்றக்கூடாது?

அல்லும் பகலும், மக்காவிலும், மதீனாவிலும், வீட்டிலும் வெளியிலும், பகைவரின் பெருங்கொடுமைகளுக்கிடையிலே பொறுமையுடனும், விடாமுயற்சியுடனும் அந்தப் பகைவருக்காகப் பிரார்த்தனை செய்த பொறுமையின் திருஉருவை ஏன் புகழக்கூடாது?

அரேபியாவின் அரசராக இருந்தும், பெருஞ்செல்வங்கள் காலடியில் வந்து குவிந்தபொழுதும், தாம் சிறியதொரு குடிசையில் காலங்கழித்து, ஒட்டுப் போட்ட ஆடையுடுத்தி, பசியும் பட்டினியுமாக இருந்து,

''என் இறைவனே! என்னை மறு உலகில் ஏழைகளுடன் எழுப்பு!'' என்று இறைவனிடம் கெஞ்சிய வள்ளல் நபியை ஏன் வாழ்த்தக்கூடாது?

பூரணப் பேரின்ப வழிகாட்டியான இந்தப் புனித வாழ்க்கையை மக்கள் பின்பற்றி இறைநெறியில் இன்புற்று வாழ இறைவன் அருள் புரிவாஞக!

# பொருளடக்கம்

முதற் பதிப்பு—நவம்பர், 1957.
இரண்டாம் பதிப்பு—நவம்பர், 1962.
மூன்றும் பதிப்பு—ஏப்ரல், 1969.
நான்காம் பதிப்பு—ஆகஸ்டு, 1990

விலை ரூ. 8-00

## உட்பொருள்



கிடைக்குமிடம் :

சுலைமானியா பப்ளிஷர்ஸ்
28. நாராயண சாரங் கார்டன் தெரு, சென்னை. 600 001.

அச்சிட்டோர் :

மாஹின் பிரிண்டர்ஸ்
29, அப்பு மேஸ்திரி தெரு,
சென்னை-600 001.

பொருளடக்கம்

# மக்கநகர் நாயகமே!

சுத்தபர வெட்டவெளி தோன்றுபொரு ளத்தனைக்கு
மொத்தமுதற் காரணமா மோங்குமியல் தாங்கியுறு
வித்தரிய மக்கநகர் வீற்றிருந்து மாற்றமற
இத்தரையிற் பெற்றபுக ழேத்தற் கெளிதேயோ
இன்பநபி நாயகமே ஏத்தற் கெளிதேயோ!

ஆதியொரு வன்றெருழுகை ஐவேளை நோன்புடைமை
போதியநல் லேழைவரி புக்கமக்க ஹஜ்ஜைந்தும்
நீதிதரு சன்மார்க்க நீர்மையவென் றேதிமுதன்
மாதிரியாய் முன்னின்ற வள்ளன்மை யுள்ளேமோ!
மன்னர்நபி நாயகமே வள்ளன்மை யுள்ளேமோ!

வாய்ந்ததிரு கஃபாவில் வல்லவனை யுன்னிமன
மோய்ந்ததொழு கைச்சமயத் தொட்டகத்தி னூன்குடரே
டேய்ந்ததசை கொண்டெறிந்த வீணனுக்கு மின்னருட்சீ
ராய்ந்தளித்துக் காத்தவுங்கள் அன்புடைமை நன்றேயோ
ஆலநபி நாயகமே அன்புடைமை நன்றேயோ!

வாய்ந்தபெரு நாள்வரிசை வாங்கிநல்லத் தந்தையின்றி
யோய்ந்தழுத வேழைமகற் குள்ளுடைந்து நீராட்டி
தோய்ந்தநறும் பட்டுடுத்தித் தூங்கியிரு தோட்டுணைகொண்
டேய்ந்ததிரு பள்ளிபுக்க வின்னருளு மென்னேயோ
இன்பநபி நாயகமே இன்னருளு மென்னேயோ!

மக்களிடைத் தாழ்வுயர்வு வன்மைமென்மை தீண்டாமை
மிக்ககுல பேதமுதல் வேற்றுமையெ லாமொறுத்துத்
தக்கசம தத்துவமாந் தண்ணிழற்கீ ழாக்கியென்றுந்
தொக்கவருள் கூர்ந்துவந்த துய்யநிலை பொய்யேயோ
சோதிநபி நாயகமே! துய்யநிலை பொய்யேயோ!

*மகாமதி, சதாவதானி* கா. ப. செய்குத் தம்பிப் பாவலர்